உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 10 — குரோதன௵ ஆனி௴ ௧௳ — பகுதி 12

1925௵ ஜூன்௴ 14௳

## கடவுள் வணக்கம்.

வெந்நீர் பொருதெனுடல் காலின்முட் டைக்கவும்
வெடுக்கென் றசைத் தெடுத்தால்
விழியிமைத் தங்ஙனே தண்ணருளை நாடுவேன்
வேறொன்றை யொருவர் கொல்லின்
அந்நேர மையோவென் முகம்வாடி நிற்பதுவும்
ஐயநின் னருளறியுமே
ஆனாலு மெத்தப் பயந்தவ னியானென்னை
யாண்டநீ கைவிடாதே
இந்நேர மென்றிலை யுடற்சுமைய தாகவும்
எடுத்தா லிறக்கவென்றே
எங்கெங்கு மொருதீர்வை யாயமுண் டாயினும்
இறைஞ்சுசுக ராதியான
தொன்னீர்மை யாளர்க்கு மானிடம் வகுத்தவருள்
துணையென்று நம்பு கின்றேன்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே. (1)

---

இந்த நிருவிகற்பத் தெந்தை யிருக்கநிட்டை
சிந்தைநீ தேறாய் செகமனைத்தும்—வந்ததொடர்ப்
பாடுகெட வன்றோவோர் பாத்திரத்துக் காடல்லா
லாடுவதே னாட்டு மவன். (2)

---

நாளவங்கள் போகாம னாடோறு நந்தமையே
யாளவந்தார் தாளிங்கீ ழாட்புகுந்தாய்—மீளவுன்னைக்
காட்டாம னிற்குங் கருத்தறிந்தா னெஞ்சேயுன்
னாட்டானா னையமில்லை யால். (3)

## அரும்பொருள் விளக்கம்.

1. மனித சரீரத்தின் அருமையை இப்பாடலில் ஆசிரியர் ஒருவாறு விளக்குகின்றார். இச்சரீரமே முத்திப் பேறடைவதற்குக் காரணமாயிருத்தலென்பது,

"தேவரு மாந்த ராகிச் சேரவே ணவாக்கூர் வாரால்
காவல வெனினு மாந்தர் கருதுதம் பிறவி மீட்டும்
மேவவேண் டுவரோ வென்னின் வினவரு மென்றே வேண்டார்"

எனவரும் பாகவதச் செய்யுளால் தெரியவருகின்றது.

அத்தகைய சரீரம் இளம்பருவந் தொடங்கி மிகவும் அருமையாக வளர்ந்ததாதலின் சிறு கஷ்டம் நேரிடினும் பொறுக்கும் சக்திகொண்டிலது என்றும், காலில் தைத்த முள்ளை வெடுக்கென்று அசைத்துப் பிடுங்கினால் அதையும் பொறுக்க முடியாமல் கண்ணிமைத்துத் தேவரீருடைய திருவருளை நாடுமென்றும் கடவுளை நோக்கி விண்ணப்பித்துக்கொள்ளுகின்றார்.

பின்னும், அச்சரீரத்தைப் பெற்ற அடியேன், பிறரெவரேனும் ஜீவஹிம்சை இயற்றக்காணின், அப்பொழுதே முகவாட்டம் அடைவதைத் தேவரீர் திருவருள் நன்குணருமென்றும் தெரிவிக்கின்றார். இவ்விரக்கம் உண்டாவது உத்தம நெறியிலுள்ள பெரியார்க்கு சுபாவம். அது,

"துண்ணெனக் கொடியோர் பிறவுயிர் கொல்லத்
தொடங்கிய போதெல்லாம் பயந்தேன்
கண்ணினு லேயோ பிறவுயிர் பதைக்கக்
கண்டகாலத்திலும் பதைத்தேன்
மண்ணினில் வலையுந் தூண்டிலுங் கண்ணி
வகைகளுங் கண்டபோ தெல்லாம்
எண்ணியென் னுள்ள நடுங்கிய நடுக்கம்
எந்தைநின் றிருவுள மறியும்"

எனவரும் திருவருட்பாவா லினிது வெளியாம்.

ஆதலால் மிகவும் பயங்கரம் பொருந்திய என்னை யடிமைகொண்ட தேவரீர் கைவிடக்கூடாது என்கிறார்.

இந்த உடற்பாரம் இன்ன காலத்தில் இன்ன இடத்தில் விழும் என்கிற நியதியில்லை.

"நெல்லறுக்க வோர்காலம் மலர்கொய்ய வோர்காலம்
நெடிய பாரக்
கல்லறுக்க வோர்காலம் மரமறுக்க வோர்காலக்
கணித முண்டு
வல்லரக்க னனையநமன் நினைத்தபோ தெல்லாநம்
வாழ்நா ளென்னும்
புல்லறுக்க வருவனெனில் நெஞ்சமே மற்றினியான்
புகல்வ தென்னே"—நீதிநூல்.

"காடோ? செடியோ? கடற்புறமோ? கன மேமிகுந்த
நாடோ? நகரோ? நகர்நடு வோ? நல மேமிகுந்த
வீடோ? புறந்திண்ணை யோ? தமி யேனுடல் வீழுமிடம்
நீடோய் கழுக்குன்றி லீசா! வுயிர்த்துணை நின்பதமே"
—பட்டினத்தார்.

இப்பாடல்கள் முறையே சரீரம் விழும் காலத்தையும் இடத்தையும் ஒருவாறு வெளியிடுவது கவனிக்கத்தக்கது.

ஆனால் பிறப்பன இறக்கும் என்பது நியதமாக வேற்பட்டிருக்கின்றது. அப்படி யிருந்தும், சுகர் முதலிய பெரியோர்களுக்குத் தீர்க்காயுளைக் கொடுத்த திருவருளெதுவோ அதனை விரும்புகிறே னென்பார் 'எடுத்தா லிறக்கவென்றே, எங்கெங்குமொருதீர்வை யாயமுண் டாயினும் இறைஞ்சு சுகராதியான, தொன்னீர்மையாளர்க்கு மானிடம் வகுத்த வருள் துணையென்று நம்புகின்றேன்' என்றார். அடியார்கள் தீர்க்காயுளை விரும்புவது யாதுக்கோவெனின் கிடைத்த பிறவியிலேயே திருவருளைப் பூர்த்தி செய்துகொள்வதற்கே.

தீர்வை = தீர்ப்பு.
ஆயம் = கடமை.
இறைஞ்சுதல் = வணங்குதல்.
தொல்நீர்மையாளர் = பழமையாகிய குணவான்கள்.
மானுடம் = மனிதசரீரம்.

2. நிருவிகற்ப சமாதி = ஒரு யோக நிலை. தானாகவும் தனக்கன்னியமாகவுங் காணப்பட்ட தத்துவ விகற்பங்கட்கு அன்னியமாகவிருத்தல்.

நிருவிகற்பம் = ஒருமையுணர்ச்சி.
தொடர்ப்பாடு = கன்மத்தொடர்ச்சி.
கெட அன்றோ = நீங்கும் பொருட்டல்லவா.
பாத்திரம் = விளையாடல்.
ஆடு = நடனம்.

இங்கு எந்தை என்பது தக்ஷிணாமூர்த்தியை.

இறைவன் இந்த நிருவிகற்ப சமாதியில் நிஷ்டை கூடியிருக்க அதன் அருமையை நீ மனதிற் றேர்ந்தாயில்லை; பிரபஞ்ச முழுவதும் விளைந்துள்ள கன்மத்தொடர்ச்சி நீங்கற்பொருட்டல்லவா அப்பிரபஞ்சத்தை யாட்டுவிக்கும் முதல்வன் நிஷ்டை கூடியிருப்பது. இஃதோர் விளையாட்டார்த்தமான விஷயமே யல்லது வேறன்றாம்.

"ஆட்டுவித்தா லாரொருவ ராடாதாரே" என்றதற்கேற்ப உலகத்தை யாட்டுவிக்கும் முதல்வன் தக்ஷிணாமூர்த்தி கோலத்தினின்று நீங்கித் தானாடுவது எற்றுக்கெனின் உலகத்தில் கன்மம் நசிக்கச்செய்யவேண்டியாடும் திருவிளையாட்டேயாம்.

எவ்வாறெனின் உயிரசையின் உடலசைவதுபோல உயிருக்குயிரா யுள்ள முதல்வன் அசையின் உயிரசையும்; உயிரசையவே கன்மத்தை யனுபவிக்க நேரிடும். அவ்வநுபவம் நாளடைவில் கன்ம நசிப்பிற் கேதுவாம்.

"* * * ஐயாநீ யாட்கொண் டருளும் விளையாட்டி
னுய்வார்க ளுய்யும் வகையெல்லா முய்ந்தொழிந்தோம்"

என்னும் திருவெம்பாவை யிங்குணர்தற் குரியது.

3. நாள் = காலம்.
அவங்கள் = வீணான செயல்கள்.
ஆளவந்தார் = ஆட்கொள்ளவந்த ஞானாசாரியன்.
ஆட்டாளன் = ஆள்தான் நான் (நானுன்னடிமையே).

ஞானாசாரியனை வழிபட்டுய்ந்த பின்னர், பிரபஞ்ச முகமாக மனதைச் செலுத்தாமல் வாழுவதே மேலுமேலும் ஆசாரிய னநுக்கிரகம் உண்டாவதற் கேது என்பது கருத்து.

"இருப்பாய் இருந்திடப்பே ரின்பவெளிக் கேமக்குக்
குருப்பார்வை யல்லாமற் கூடக் கிடைத்திடுமோ
அருட்பாய் நமக்காக ஆளவந்தார் பொன்னடிக்கீழ்
மருட்பேயர் போலிருக்க வாகண்டாய் வஞ்சநெஞ்சே"

என இவரே கூறுவதும் கவனித்தற் குரியதாம்.

---

ஆனந்தபோதினி

குரோதனஹு ஆனிமீ கஉ

## வானமுந் தானமும்.

வானமென்பது அதிவிருஷ்டி (பெய்து கெடுத்தல்) அனாவிருஷ்டி (பெய்யாது கெடுத்தல்) என்கிற குறைபாடின்றி வேண்டுங் காலத்தில் வேண்டிய அளவு பெய்து காக்கும் மழையையும், தானமென்பது மனதாரச் செய்யக்கூடிய பரோபகாரமான ஈகைத் தன்மையையும் இவ்விடத்தில் குறித்து நிற்கின்றன. வானம், தானம் என்னும் இரண்டும் ஒன்றற்கொன்று பெரும்பான்மையும் காரண காரியமாய் அமைந்துள்ளன. வானமாகிய காரியத்திற்குத் தானம் காரணமும், தானமாகிய காரியத்திற்கு வானம் காரணமும் ஆகின்றன.

"மழையின்றி மாநிலத்தார்க் கில்லை மழையுந்
தவமிலா ரில்வழி யில்லை தவமும்
அரசிலா ரில்வழி யில்லை அரசுங்
குடிவாழ்வா ரில்வழி யில்"

என்னும் ஆப்த வசனம், மழையால் குடிகளும், குடிகளால் அரசனும், அரசனால் முனிவரும், முனிவரால் வானமும் (மழையும்) சிறப்படைதல் வேண்டும் என்கிற கருத்தை வெளியிடுகின்றது.

தொன்று தொட்டுத் தானமாகிற பரோபகாரத்தை நமது முன்னோர் மறவாது திரிகரண வாயிலாகக் கையாண்டு வந்தமையால், நம் தேசம் "அடையா நெடுங் கதவும் அஞ்சலென்ற சொல்லும்" படைத்த புண்ணிய பூமி என்கிற பிரசித்த பெயரை யடைய நேர்ந்தது. ஏராளமான உணவுப் பொருள்களை விளைவிப்போரும், இல்லையென்னும் சொல்லை யறியாத ஈகையாளரும், குபேர சம்பத்துடைய தனதிபரும், பேரறிஞருமாகிய மக்கள் வாழப்பெற்ற இந்தப் பாத நாடானது சகல வளங்களுந் தழைக்கப்பெற்று, பிற நாடுகளையும் ஆதரிக்குஞ் சக்திவாய்ந்து, எவரும் புகழும் பாக்கியத்தை யடைந்தது எதனால்? காலத்திற் பெய்யவேண்டிய வானம் சுருங்காமையாலல்லவா?

தான வளம் சிறந்திருந்ததினாலன்றோ இத்தகைய வான வளத்தை நம் நாடு பெற்றது. வானத்துளி நோக்கிவாழும் பொருட்டு, நாம் தான வளத்திற் கண்ணுங் கருத்துமா யிருத்தல் வேண்டும். இந்த அரிய நோக்கத்தை நமது நாடு தன் இருதயத்தில் பசுமரத் தாணிபோல் பதியவைத்து, செய்கையிலும் காட்டிவந்தது.

அறம், பொருள், இன்பம், வீடு என்னும் புருஷார்த்தங்களை உலகின்கண் நிலை நிறுத்துவதற்குப் பரமாத்மாவின் கட்டளையால் ஏற்பட்ட மழை வளம் சுருங்காதிருக்கும் வண்ணம், யாகாதி சத்கிருத்தியங்களையும், நல்ல தான தருமங்களையும் நாம் செய்துவரல் வேண்டு மென்று புராண நூல்கள் பிடிவாதமாகப் பேசுகின்றன.

மக்களின் உயிர்நிலை முதலிய சகல பொருள்களையுஞ் சுத்திகரிக்கவும், பசிப்பிணியை யொழித்தற்குரிய உணவுப்பொருள்களை விளைவித்துக் கொடுக்கவும், அவற்றைப் பண்படுத்தவும், அவை யுண்ணப்படும்பொழுது தானும் ஓர் உணவுப்பொருளாய் உடனிருக்கவும் உதவுகின்ற அமுதம் வான நீரினும் வேறுண்டோ? உலோபியின் கைப்பொருள் இகபரவாசையற்ற யோகியின் கைப்பட்டமாத்திரத்

தில், பரிசவேதியிற் படிந்த லோகம்போல் எப்படிச் சுத்தியடைந்து தோஷ ரகிதமாகிறதோ அப்படிச் சமுத்திர நீரானது மேகத்தின் கைப்பட்ட மாத்திரத்தில் உப்புத்தன்மை யொழிந்து வான நன்னீராய் நமது நன்னாட்டுக்கும் பொன்னாட்டுக்கும் அமுதம்போ லுதவுகின்றது. "நீரே பிராணாதாரம்" அல்லவா? ஆகவே, இவ்வித உயர்வையுடைய வானத்தின் ஆவசியகத்தை அறியாதார் அறியாதாரே. விரிந்த கடல் நீரும் சுகமடைதற்பொருட்டு இவ்வானத்தையே எதிர்பார்க்கின்றது.

இத்தன்மை வாய்ந்த வானஞ் சுருங்கினால் தானமுஞ் சுருங்கும். தானஞ் சுருங்கத் தவமுஞ் சுருங்கும்.

"தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்"

என்றார் முதற் பாவலர்.

வானஞ் சுருங்கிய காலத்தில் தானத்திற்கான நெல் முதலிய தானிய வகைகளேயன்றித் தவமுந் தங்காதாகும். உயிரானது உடலில் நிலைத்திருந்தால்தான் தவம் தங்கும். அது நிலைத்தற்கு ஏதாவது உணவேனும் ஜலமேனும் கொஞ்சம் அருந்தித் தீரவேண்டும். அந்த உணவுப் பொருளும் ஜலமும் வானமின்றேல் இல்லையாம். ஆகவே தவமும் தங்காதென்க.

தானம் தங்காமை பாண்டியனிடத்தும் தவந் தங்காமை கௌதமர் முதலிய மகரிஷிகளிடத்தும் காணலாம்.

சற்றேறக்குறைய இரண்டாயிர வருஷங்களுக்கு முன்னர் மதுரைமாநகரில் பாண்டியனொருவன் அரசுபுரிந்து வந்தான். அவன் கல்வி கேள்விகளிலும் பராக்கிரமத்திலும் நிபுணனாயிருந்தான். அநேகமாயிரம் வித்வ சிரேஷ்டர்களைத் தன்னிடம் வைத்துக்கொண்டு பாதுகாத்து வந்தான். அந்தக் காலத்தில் அவனுடைய தேசத்தில் நெடுநாள் மழை பெய்யாமையால் அவன் புலவர்களை ஆதரிக்கக் கூடவில்லை. அதனால் அரசன் அவர்களைப் பார்த்து மனவிரக்கத்துடன் "நீங்கள் எனது நாடு செழுமை பெறுமளவும் வேறெங்கேனும் செழித்துள்ள நாட்டைச் சேர்ந்திருந்து வாருங்கள்" என்று சொல்லி எல்லோரையும் அனுப்பிவிட்டான். இதனால் தானம் தங்காமை வெளிப்படை. (இறையனாரகப் பொருள்.)

கௌதம ரிஷியைப்பற்றி நாம் கேள்வியுற்றிருக்கிறோம். இவர் அகலிகையின் பிராணபதி. முக்காலமு முணர்ந்த முனிவர் பெரு

மான். திருக்குறளில் நீத்தார் பெருமையைக் கூறவந்த நாயனுர் இவருடைய ஆற்றலை ஆங்கே எடுத்துப் பேசியுள்ளார்.

இந்த மகரிஷி தென்றிசையிலுள்ள பிரமகிரியில் தவஞ் செய்து கொண்டிருந்தபோது பல வருஷங்கள் மழையில்லாதிருந்தது. அனேக உயிர்கள் பசிப்பிணியால் இறந்தொழிந்தன. தபோதனர் பலர் தவஞ்செய்ய முடியாமல் மனங்கலங்கினர். உடல் துடித்தனர். பல இடங்களிலும் பிரிவுபட்டுச் சென்றனர். இந்தக் காலத்தில் கௌதமர் மாத்திரம் நிலைகுலையாதிருந்து வருணனை நினைத்தார். வருணன் இவருடைய தவப் பெருமைக்குப் பயந்து இவர் முன் தோன்றினுன். மகரிஷி அவனைக் கண்டு மழை வேண்டுமென்று கோரினுர். அவனும் அவர் விருப்பத்திற்கிசைந்து என்றும் வற்றாத நீர் நிலை யொன்றை யளித்து விடைபெற்றுச் சென்றுன். கௌதமர் அந்த நீர் நிலையினுல் சந்தோஷமடைந்து சுகமுடன் வாழலானுர். (ஞானசங்கிதை.)

இவ்விரண்டு சரித்திரங்களினுலும் வானஞ்சுருங்குமாயின் தானமும் தவமும் சுருங்குமென்பதை நாம் அறியலாமுேம். ஆதலால் வானஞ் சுருங்காதிருக்கத் தானம் வழங்கவேண்டும்.

இக்காலத்தில் செயற்கை வாசனையால் நம்மவர் பலர் நமது பூர்வீக ஆசாரங்களைக் கைவிட்டுத் தம் மனம்போல் நடக்கத் துணிந்து, தான தருமங்களைச் செய்யவேண்டிய முறையில் செய்யாது வீணுடம்பாகாரத்தில் காலங் கழிப்பதை நாம் காண்கின்றேம். இது பற்றியே சரியான காலத்தில் பெய்யவேண்டிய மழை வளம் குன்றி, அகால மழை பெய்து, நமக்குப் பெரும் நஷ்டத்தையும் பிராணுபத்தையும் உண்டுபண்ணி வருகிறது. இதை நாம் கண்கூடாகக் காணுவதால் இனியேனும் திருத்தமடைந்து நம் பெரியோர் கொள்கைகளை அனுசரிப்போமாயின் சுகமடையலாம்.

பிறவிகள் பலவற்றுள்ளும் மானுடப்பிறவியே தலைமை வாய்ந்தது. அப்பிறவி கிடைப்பது மிகவும் அருமை; அப்படிக் கிடைத்த போதும் அங்கப் பழுதின்றி வருவது அதனிலும் அருமை; பழுதின்றி வரினும் வருமிடம் நீர்வளம் நிலவளமுள்ள உத்தம ஸ்தலமாகவும், குலம் குற்றமற்ற பாரம்பரியத்தை யனுசரித்ததாயும் அமைவது மேற்சொன்னவற்றிலும் அருமை; இவையெல்லாம் கைகூடினும் கல்வி நலம் சித்திப்பது அருமையினும் அருமை; அந்நலம் சித்தித்தவிடத்தும் லௌகிக வைதிக முறைகளை யறிந்து இனிய சொல்

வன்மையும்,உரியநல்லொழுக்கமும்,அரிய தெய்வபக்தியும் கொண்டு, குலவிளக்காய் நின்று, சுயநலத்தோடு பொதுநலத்தையும் சமமாகப் பாவித்து, ஒற்றுமையுடன் உழைத்து இசையை நாட்டுவது யாவற்றினும் அருமை.

இவ்வித அருமைக்குரிய பிறவியை எடுத்த நாம் அறநெறியைக் கைவிடலாகாது. அறநெறியாவது இட்டுண்டு வாழ்வதாம். "ஈதல் அறம்" என்றனள் ஔவைப்பிராட்டி. இந்த ஈதலுக்கே 'தானம்' என்பது மற்றொரு பெயர். இந்த தானத்தால்தான் வானம் கிரமமாகப் பெய்து வரவேண்டும்; நாடு செழிக்கவேண்டும்; ஒற்றுமை வளரவேண்டும்; மற்றுமுள்ள நலன்களெல்லாம் சித்திக்கவேண்டும். ஆகையால் நாம் ஒவ்வொருவரும் இவ்வுண்மையைக் கடைப்பிடித்தொழுகத் திடமான சித்தத்தைக் கொள்வோமாக. வான தானங்களின் மகத்துவம் முடிவற்றதாகலின் இப்போது இத்துடன் நிறுத்துவோமாக. தானத்தைப்பற்றி வானத்தைப்பெற எல்லாம் வல்ல பகவான் திருவருள்புரிவாளுக.

ஓம் தத் ஸத்.

---

## அகம்புறக்காட்சி விளக்கம்.

(417-ம் பக்கத் தொடர்ச்சி.)

**4-வது மறைவான ஆன்மா லோகத்தில் நின்றும், பெய்யும்படியான சூட்சும அருள் மழையானது மூடமுள்ள மனிதர்கள் இருதயத்தில் தங்கும். அதனுல் அசுப வாசனையான துன்மார்க்கச் சிந்தையுடையவனுகி உலகத்தை மிகுதியாகச் சேர்க்கவேண்டுமென்ற பேராசையான கள்ளைக் குடித்து மயக்கவெறியால் நானென்கிற அகங்கார ஸ்தம்பத்தை நிலையாக நாட்டி எனக்கே சொந்தமென்ற மமதையான கொடியைப் பாசமென்ற கயிற்றினுல் கட்டி உயரவேற்றி அஞ்ஞானமென்ற அந்தகார விருளினுல் அரண்வளைந்து,பெருமையென்னும் ஆசனத்தில் உட்கார்ந்து எவ்வேளையும் காமவிகாரம் மேலிட்டு விவேகமில்லாத அந்தகனுகவே இருந்துவருவான். இன்னும் இவன் தன்னையும் தனக்கு ஆதாரமாயிருக்கிற பிரமத்தையும் மறந்து மிருகம்போ லெதையுஞ் செய்து இருவினையால் வரும் சுக துக்கச் சுமைகளைச் சேகரித்துத் தன் புயமேல் வைத்துக் காவடிபோல் சுமந்து எந்நாளும் தேக சம்பந்தமான நரகத்திலும் சொர்க்கத்திலும் சுழன்று கொண்டிருப்பான். இதைப்பற்றிக் குணங்குடி மஸ்தான் சாஹிப்பவர்களால் "கனக்கு மிருவினையாங் காவடியைத் தூக்குதற்கு எனக்கு முடியாதினி யெந்தாய் பராபரமே" என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதமா யிருப்பதன்றித் தான் ஜீவித்திருக்குமிது சமயமே தன் ஆன்மாவானது அந்தகார**

மாகிய இருட் கிடங்கில் கட்டுண்டு கிடப்பதை யறிந்து நன்மார்க்க ஞான வழியால் வெளிப்படுத்தி சதா ஆனந்த ஆன்மா சொர்க்கத்திலிருக்க வறி யார்கள். இன்னும் இவர்கள் புறம்பேயிருந்து வாயின் வழியாய் வயிற்றி னுள் செல்லும் போஜனாதிகளைச் சுத்தமென்றும் அவ்வஸ்துவே செறிந்து ஆசன மார்க்கமாய் வெளிப்படுவதைமட்டும் அசுத்தமென்றுங் கண்டு வில குவார்களே யன்றித் தன்னிருதயத்திற்குள்ளிருந்து வெளிப்பட்டுக்கொண் டிருக்கும் கெட்ட குணங்களைக் கண்டு விலகி அதை நீக்க முயற்சிக்கமாட் டார்கள். இதைப்பற்றி இஞ்சீல் வேதத்தில் "மனுஷனுக்குப் புறம்பே இருந்து அவனுக்குள்ளே போகிறதொன்றும் அவனைத் தீட்டுப்படுத்தமாட் டாது. அவன் உள்ளத்திலிருந்து புறப்படுகிறவைகளே அவனைத் தீட்டுப் படுத்தும்" என்று சொல்லப்பட்டிருக்கின்றன. இன்னும் இவன் இறந்த பின் நிர்ப்பாக்கியனும், பரதவிக்கப்பட்டவனும், தரித்திரனும், குருடனும் புண்ணியப் பொருளறவே இல்லாத நிர்வாணியாயிருப்பதை அறியாமல் நான் ஐசுவரியவானென்றும், திரவிய சம்பன்னனென்றும், எனக்கு யாதொரு குறைவுமில்லை யென்றும் சொல்லிக்கொண்டு தனக்கு எவரும் பணிந்து நடக்கவேண்டுமென்ற ஆவேசச் செய்கையுடன் பெருமையும் புக ழும் அந்தஸ்தும் உயர்தரப் பட்டமும் விரும்பிக் கணக்கற்ற திரவியங்களைச் செலவு செய்வார்களே யன்றி நன்மார்க்கமாய்ச் செலவுசெய்து புண்ணியங் களைத் தேடி வைத்துக்கொள்ளமாட்டார்கள். இவர்கள் இருதயத்தின் கண்ணுள்ள புத்தியை ஞானமார்க்கத் தேர்ச்சியடையாதிருக்கச் செய்யும் அஞ்ஞானமென்னும் அறியாமையான இருள்மூடி யுணர்வில்லாதவர்களாய்ச் சகலவித அசுத்தங்களையும் ஆசையோடு நடப்பிக்கும்படித் தங்களை இச்சா விகார அரசனிடம் ஒப்புக்கொடுத்து அவனுக்கு வழிப்பட்டு நன்மார்க்க வேதவிதியை யனுசரியாமல் மீறிநடப்பார்கள். இன்னும் பகுத்தறிவில்லாத மிருகங்களுக்குக் காமாதி பசி தாகம் வந்தடுத்தபோது கண்ணில் கண்ட எவ்வஸ்து யாருக்குடையதாயிருக்கினும் அதைத் தின்னவும் சுத்தாசுத்த முணராத எந்த நீராயிருக்கினும் அதைப் பருகவும், பகலிரவு பேதமறியா தெவ்விடமாயிருக்கினும் அவ்விடத்திற் காணுந் தன்னினமோடு கலந்து சுகிக்குந் தன்மைபோலுள்ள சிற்சில மனிதர்களும் அநியாயமாய் அன்னிய ருடைய முதல்களைக் கவர்ந்துகொண்டு தின்னவும் முழுதும் அசுத்தம் நிறைந்ததும் துன்மார்க்கத்துக்கு ஏதுவாயிருந்துவருகிற மதுபானம் அரு ந்தி வெறிகொண்டிருக்கவும் விஷயத்தேள் கொட்டி மோகத்தால் நீதிவழி தவறி மறைவாக வெகு வேகமாய்ப் பிறர்மனை புகுந்து ஆங்குள்ள இடுகாடு இடைநடுவே சூழ்ந்தெரியும் அக்கினிக் குண்டத்தில் உட்கார்ந்து மின்னல் போற் றோன்றி மறையும் விடையானந்த மிச்சா வடிவையே கடவுளாகக் கருதி அது சம்பந்தமான இன்ப ஆடல்கள் முதலான மலர்களைத் தூவி ஓம் ஸ்தூல அகங்கார இச்சையே நமஹா வென்ற மந்திரத்தை உச்சரித்துத் தகனபீடத்தில் வைத்திருக்கும் பிணத்தைப்போலே கீழே விழுந்து தேகா லிங்கன கூட்டுறவு பூசை செய்து வருவதன்றிச் சர்வ வல்லமையுள்ள கடவு

ளின் திருவருள் பிரகாசிக்கும்படியான தேவாலயங்களில் சென்று ஒரு பொழுதாவது மனமுருகி இருகண்ணீரொழுக அஷ்ட அங்கங்களுந் தரையிற் படிய வணங்கி நிற்க வறியார்கள். இவ்விதமான பழக்க வாசனையே மனதிற் படிந்திருந்து புறம்பே எந்த ஸ்திரீகளைக் காண்கினுங் கடைக்கண் பார்வையோடு இச்சை என்கிற அம்பை வெகு வேகமாய்ச் செலுத்தி அவ்வடிவாகாரமாய் மனதைத் தொடுத்து விஷய அனலை மூட்டிக்கொண்டே இருப்பார்கள். இவ்விதமான வம்பர்களைப்பற்றி சபூர் வேதத்தில் "துன்மார்க்கன் தன் கெர்வத்தினால் தேவனைத் தேடான். அவன் நினைவுகளெல்லாம் தேவன் இல்லையென்பதே. அவன் வழிகள் எப்போதும் கேடுள்ளவைகள். உம்முடைய நியாயத் தீர்ப்புகள் அவன் பார்வைக்கு எட்டாமல் மிகவும் உயரமாயிருக்கின்றன" என்று மொழிந்திருக்கின்றன. இப்படிக் கொத்த அக்கிரமச் சேட்டையுள்ளவர்களே எல்லா விடங்களிலும் விசேஷமாய்க் காணுகின்றபடியால் இக்காலத்தில் எக்காலத்திலுமில்லாத நூதன சம்பவங்களும் மகா கல்வியுள்ள டாக்டர்களால் கண்டுகொள்ள வொலாத ஆச்சரியமான நோய்களும் இன்னும் அநேக விதமான கெடுதிகளும் அடிக்கடி திடுகூறு யேற்பட்டு உயிர் துறக்கச்செய்து மண்ணுக்கிரையாக்குகின்றன. ஐயோ இதைப்பற்றி ஆராயும்போது நன்மார்க்க வழிபெற்று மனிதர்கள் மோட்சம் அடைவதற்காகக் கடவுளின் கருணையில் நின்று உண்டான கோபாக்கினியென்று சொல்வதன்றி வேறில்லை. இது விஷயமாய் சபூர் வேதத்தில் வருமாறு. " ஆதலால் இதோ என் கோபமும் என் உக்கிரமும் இந்த ஸ்தலத்தின்மேலும், மனுஷர்மேலும், மிருகங்கள்மேலும், வெளியின் மரங்கள்மேலும், பூமியின் கனிகள்மேலும் ஊற்றப்படும். அது அவியாமல் எரியும் என்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்" என்று சொல்லப்பட்டிருக்கின்றன. இன்னும் இவர்கள் எப்பொழுதும் கொந்தளித்துக்கொண்டிருக்கும்படியான கடல்ஜலம் தன்னிடத்தில் ஆழ்ந்துகிடக்குஞ் சேற்றையும் அழுக்கையுங் கிளறி மேலே கிளப்பி எல்லா நீரையும் அசுத்தஞ்செய்து கரையில் தள்ளிவிடுவதுபோல் இவர்களின் மனமென்னுங் கடலில் ஆழ்ந்து கிடக்கும் அசுபவாசனைகளென்னும் துற்குணங்களான காமக் குரோத லோப மோக மதமாச்சரியம் டம்பம் இடும்பைக் கோப மிவைபோலொத்த மலினங்களையெல்லாங் கிளறி மேலே கிளப்பி மனோ வாக்குக் காயங்களினால் சர்வ ஜீவர்கள்பேரிலும் தாக்கிக்கொண்டு அறியாத மதியினராயிருந்து வருவார்கள். இதைக்குறித்து குரானில் "அவர்களுடைய இருதயங்களில் வியாதி உண்டாயிருக்கிறது" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. ஐயோ இவர்களுக்கு சர்வ சக்தியுள்ள கடவுளொருவர் இருக்கிறாரென்ற எண்ணம் சற்றேனும் நெஞ்சில் கிடையாது. ஆடு மாடுபோல் தின்னவும், பருகவும், போகிக்கவும், நித்திரை செய்யவுமாயிருந்துவருவார்களே யன்றி இவர்களுக்குப் பின்னால் நேரிடுங் கெடுதிகளை அற்பளவும் உற்றுணர்ந்து நன்மார்க்கப் பிரயத்தினஞ் செய்யமாட்டார்கள். எப்பொழுதும் உலகசம்பத்தையே கருதி யதற்கு வேண்டுமான தந்திரம்

சூது, வாது, கபடு, மாருட்டம், வஞ்சகம், பொருமை, பொய், புலை, கோள் முதலானவைகளை தன்னுள்ளத்தில் அமைத்து வைத்து யார் எதிர்ப்படுவாரென்ற நோக்கத்தோடிருந்து வருவார்கள். சிற்சில சமயங்களில் அவர்களின் மன விருப்பத்திற்கு விகற்பமாய் அற்பக் குற்றங்கள் நேர்ந்தபோது தன் போத மறந்து எதையும் யோசியாமல் திடீரெனுய் கோபாக்கினியான நாயானது வெகு வேகமா யெழுந்து பன்றிபோ லுறுமிப் பாம்புபோல் சீறிப் பாய்ந்து கழுதைபோல் கத்தித் தூஷணித்துப் பூனைப் பார்வைபோல் மாருமல் நோக்கி மதங்கொண்ட யானைபோல் முன்னேறி நின்று கையாடுவார்கள். இவர்கள் செய்கையைக் குறித்து குரானில் "உதிரத்தைச் சிந்துவார்கள்" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. ஆனுல் இவர்களை வெளிகோலத்தில் மனிதகோலம்போலும் பிணம்வைத்து மூடியலங்காரஞ் செய்யப்பட்ட கல்லறைபோலும் வெளிப்பார்வையால் காணப்படுவதன்றி உட்கோலத்தில் புத்தியாலாராய்ந்து பார்த்தால் கல்லறைக்குள்ளிருக்கும் பிணத்தின் நாற்றம்போலும், ஆடு, மாடு, பன்றி, கரடி, புலி, சிங்கம், ஓநாய் முதலான மிருகங்களின் குணம்போலும் அவர்கள் மனதில் வாசனை மயமாய் குடிகொண்டிருந்து ஏதாகிலும் அதற்குத் தக்க சமயம் நேரிடும்போது எதைச் செய்ய அம் மனம் சங்கற்பிக்குமோ அதையே செய்து தன்னிருதயத்தில் நிறைந்திருக்கும் அந்தகார விருள் மேகம் மறைத்து மந்தப்பட்டுக்கொண்டிருந்த புத்தியினுல் திருப்தியடைவார்கள். இதைக்குறித்து குரானில் "மனிதனுடைய மனமே அவனுக்குத் தீய போதனையை உண்டுபண்ணுவதுண்டு" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. ஆனுலிவர்கள் உயிருள்ளவர்களா யிருக்கினும் உயிரில்லாத பிரேதத்திற்கும் மிருகத்திற்கும் ஒப்பாகவே இருப்பார்கள். ஏனெனில் பிரேதத்திற்கும் இருதயமிருக்கிறது பகுத்தறியுஞ் சக்தியில்லை. கண்ணிருக்கிறது பார்த்தறியுஞ் சக்தியில்லை. காதிருக்கிறது கேட்டறியுஞ் சக்தியில்லை. மூக்கிருக்கிறது முகர்ந்தறியுஞ் சக்தியில்லை. நாவிருக்கிறது ருசித்தறியுஞ் சக்தியில்லை. உடலிருக்கிறது பரிசித்தறியுஞ் சக்தியில்லை. இவர்களுக்கோ உயிரும் சர்வதத்துவங்களும் அந்தக்கரணமும்பகுத்தறியும்படியான விவேக முதலானவைகளிருந்தும் அகம்புற மாராய்ந்து மெய்யைக்கொண்டு நிலைப்பட்டொழுகாமல் உலகபராக்கான பொய்யைக்கொண்டு நிலைப்படுகிருர்கள்; அறியாமையான விருள் மூடிக்கொண்டிருந்தபடியால் பிரேதம்போலின்றனர்; மிருகங்களுக்கு ஐயறிவுமட்டும் இருப்பதன்றி பகுத்தறியு முணர்வு இல்லாதிருப்பதைப்போல் இவர்களிடத்திலு மையறிவையன்றி பகுத்தறிவு இல்லாமலிருப்பதினுல் மிருகம்போல்கின்றனர். இதைக்குறித்து குரானில் வருமாறு : "திட்டமாக நாம் உண்டாக்கிளேம் நரகத்திற்காக அனேகரை ஜின்களினின்றும் மனிதர்களில் நின்றும். அவர்களுக்கு மனமிருக்கிறது அதைக்கொண்டறிகிருர்களில்லை. அவர்களுக்குக் கண்ணிருக்கிறது பார்க்கிருர்களில்லை. காதிருக்கிறது கேட்கிருர்களில்லை. இவர்கள் தான் மிருகத்திற்கொப்பானவர்களாகவும் எங்கும் அம்மிருகத்தைக்காண மிகவுங்

ழீனவர்களாகவும் இன்னும் மறதியுடையவர்களாகவு மிருக்கிறார்கள்" என்று சொல்லப்பட்டிருக்கின்றன. இப்படிக்கொத்தவர்கள் யாவரும் வெறுக்கத்தக்க நல்ல பாம்புக்குச் சமானமா யிருப்பார்கள். ஆனால் இவர் களைப்போன்ற பரம யோக்கியர்கள்தான் இவர்களை வெறுக்காமல் விரும்பி மிகவும் நேசமோடிருந்து வருவார்கள். இதைக்குறித்து முன்னோர்களால் "கற்றாரைக் கற்றாரே காமுறுவர், கற்பிலா மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் முதுகாட்டிற் காக்கை யுகக்கும் பிணம்" என்று சொல்லப்பட்டிருக்கின் றது. ஆகையால் எனதன்பார்ந்த சர்வமத சகோதரர்களே சொப்பனத் திற்கொப்பான அற்ப உலக வாழ்வுக்காக அக்கிரமச் சேட்டைகளைச் செய்து கடவுளின் கோபத்திற்காளாகி யனந்தநாள் தேகத்தாலும் உயிரா லும் வேதனைப்படுவதை விட்டு சொல்லரிய பேரின்ப வாழ்வைப் பெற்று சுகஜீவியா யென்நாளும் இருக்கும்பொருட்டு வேதவிதி ஞாயப் பிரமாண சூட்சும வழிசென்று கடவுளின் விருப்பமும் அன்பும் கருணை யும் பெற்று அவரால் கொடுக்கப்படும் சதா வானந்த மதுவருந்தி ஒவ்வொ ருவரும் சுகதுக்கமற்றுத் தானே தானாயிருப்பதற்கு சர்வ வல்லமையுள்ள கடவுளொருவரையே பிரார்த்திக்கின்றேன்.

K. K. செய்கப்துல்காதிர், மேலப்பாளையம்.

---

## நாலடியார் வசனம்

(385-ம் பக்கத் தொடர்ச்சி.)

### 19-ம் அதிகாரம்.

### பெருமை (பெருந்தன்மை.)

(தேவையானவைகளைக்) கொடுக்க முடியாமல் இளமைப் பருவமா னது நீங்கிப்போவதால் (அன்புடையவர்களாயிருந்த) பெண்களும் நினைத் தலு மில்லாதவரானார்கள். (ஆதலால்) (இல்லறத்தை) இச்சித்து நாம் வாழக்கடவோமென்னும் ஆசையைக் கைவிட்டு (துறவை நாடிச்) செல் வதே நல்ல காரியமாம். (1)

அறிவில்லாதவர்கள், இல்வாழ்க்கை யடைந்ததால் (நாங்கள்) இன்ப மடைந்தோம். இவ்வுலகத்தில் எல்லாவற்றையும் நிறையப்பெற்றிருக் கிறோம் என்று நினைத்து (பின்னால் வரக்கிடக்கும் துன்பங்களை) மறந்து நடப்பார்கள். அவ்வில்வாழ்க்கையில் நிலையாகக் காணப்படுபவை நிலையற் றவைகளென்றறிந்த பெரியோர்கள் (அவ்வாழ்க்கையைச் சிந்தித்து) வருந் தமாட்டார்கள். (2)

மறுமைக்கு (நல்ல பயனைத் தரும்) வித்துப்போன்ற நற்காரியங்களை மயக்கமில்லாமல் செய்து (அதனால்) நீங்கள் துன்பமடையாமல் வாழுங்கள். விவேகிகளாய் நின்ற நிலையில் இருந்தாலும் குணம் வேறுபடுதற்குரிய காரணங்களில்லாமலே பலவேறுபாடுகளுண்டாகும். (அவ்வேறுபாடுகளுக்

குட்படாமல் நற்காரியங்களைச் செய்தலில் ஊன்றி நிற்றல் வேண்டுமென் பது கருத்து.) (3)

மழை பெய்தல் அருமையாய்விட்ட காலத்திலும் ஊற்று நீருள்ள குளமானது இறைத்துக் குடித்தாலும் ஊரிலுள்ளவர்களைக் காப்பாற்றும் என்று (பெரியோர்) கூறுவார். (அதுபோல) தருமஞ் செய்தலாகிய கடமையையும், வறுமையால் தளர்ந்த காலத்திலும் பெரியோர்கள் செய்வது போல செல்வமுடையோரான காலத்திலும் சிறியோர் செய்தலருமை யாம். (4)

மிகுந்த நீரைக்கொடுத்து உலகத்தை உண்பித்து நீரற்றகாலத்திலும் தோண்டப்படுகிற ஊற்றுக்குழியிலே ஊறுகின்ற (நீரினால் உதவிசெய்யும்) ஆற்றைப்போல, (பெரியோர் தங்களிடத்திலிருந்த) செல்வத்தைப் பலருக் கும் கொடுத்து (பின்பு, அச்செல்வம்) கெட்டழிந்தகாலத்திலும் சிலருக்குக் கொடுத்து செய்யத்தக்க உபகாரங்களைச் செய்வார்கள். (5)

பெரிய மலைபொருந்திய நாட்டையுடைய பாண்டியனே! பெரியவர்க ளிடத்திலுண்டாகும் குற்றமானது பெரிய வெள்ளை எருதின்மேலிருக்கும் சூட்டைப்போல் (பிரகாசமாய்க்) காணப்படும். பெரிய எருதைக் கொன் றதுபோன்ற தீச்செயல்களைச் செய்தாலும் சிறியவரிடத்து ஒரு குற்றமும் தோன்றாமல் மறைந்துவிடும். (6)

சிறிதேனும் பொருந்திய நற்குணமில்லாதவர்களிடத்தில் சிநேகித்த வளவும் துன்பமேயாம். (எவ்வளவு சிநேகிக்கிறோமோ அவ்வளவும் துன் பமேயுண்டாகும்.) நன்னிலையினின்று மாறுபட்ட தீச்செயல்களை விளை யாட்டாகவேனும் விரும்பாத நல்லறிவாளிகளிடத்தில் விரோதமும் பெரு மையடையும். (சிநேகிக்காமல் விரோதங்கொண்டாலும் நன்மையே உண் டாவதாம்.) (7)

(ஒருவன்) வலிமையில்லாத சுவபாவமுடைய பெண்களிடம் மேன் மைத் தன்மையைக் காட்டுவதற்கும், வலிய பகைவரிடத்து அம் மேன் மைத் தன்மையை விட்டு யமனும் அஞ்சத்தக்க பயங்கர சுவபாவத்தை யுடைமைக்கும், பொய் (பேசுந்தன்மை) யுடையோர்களிடத்தில் முற்றும் பொய்யையே யுடைமைக்கும், நல்லோர்களிடத்து நன்மையே செலுத்துவ தற்கும் எல்லையாயிருக்கக் கடவன். (பெண்களிடத்து மேன்மையாகவும், விரோதிகளிடத்து அப்படிக்கில்லாமல் கடுமையாகவும், பொய்யருக்குப் பொய்யராகவும், நல்லோருக்கு நல்லோராகவும் இருத்தல் வேண்டுமென் பது கருத்து.) (8)

ஒருவன் (முகத்தைக்) கடுமையாக வைத்துக்கொண்டு கொடிய கோள் வார்த்தைகளைச் சொல்லி மயக்கினும், தம் மனத்து (சிறிதும்) வேறுபாடில் லாமல் தீபத்துள் (பொருந்திய) பிரகாசமான ஜுவாலைபோன்று அசைவற் றிருப்பவர்களே பரிசுத்தமனமுடையோராவார். (9)

பெரியோர் எப்பொழுதும் (தாங்கள்) முன்னே உண்பதற்குரிய உணவைத் தருமஞ்செய்து பின்பு உண்ணுதற்குரிய உணவையே உண்பர். அவ்வுணவானது, காமம் வெகுளி மயக்கமென்னும் மூன்று குற்றங்களையும் நீக்கி முத்தி பெறுமளவும் (அவர்களைத்) துன்பத்திலிருந்து நீக்கும். (10)

## 20-ம் அதிகாரம்—தாளாண்மை (முயற்சி.)

கொள்ளுதற்குரிய நீரை மிகுதியாகக் கொள்ளுதலில்லாத (சிறிய) குளத்தின்கீழுள்ள பசுமையான பயிரைப்போல, சில சோம்பேறிகள் (தங்கள்) இனத்தார் கொடுப்பதைப் புசித்து (அப்பந்துக்களுக்குத் தரித்திரமுண்டானபொழுது தாங்களும்) வருந்துபவராவர். வாளின்மேலிருந்து ஆடும் கூத்தாடிகளது கண்ணைப்போல ஒரேகாலத்தில் பல விஷயங்களிலும் (தங்கள்) கருத்தை விரைவாகச் செலுத்தும் முயற்சியுடையவர்களுக்கு குறையுண்டாகுமோ? (உண்டாகாது) (1)

துவளும்படியான சிறிய கொம்பாக வழியில் நின்ற இள மரமும் உள் வயிரம் கொண்டகாலத்தில் மதயானையையும் கட்டுதற்குரிய தறியாகிவிடும். (ஒருவன்) சோம்பலுக் காளாகாமல் முயற்சியால் (தன்னை) மேன்மை யடையச் செய்வானாயின் அவ்வாறே மேன்மை யடைவான். (2)

(வலிமை) பொருந்திய புலியானது (தனக்கு) மாமிச ஆகாரம் கிடைக்காமல் ஒருகாலத்தில் சிறிய தவளையையும் பிடித்துத் தின்னும் (ஆதலால்) அறிவால் (எதையும்) காலால் எளிதிற் செய்யத்தகுந்த சிறு தொழில் என்று அலட்சியம் செய்துவிடாதே. கையால் செய்தற்குரிய மேலான செய்கையும் அச்சிறு தொழிலைச் செய்துவரும்பொழுதே மிகவும் உண்டாகும். (அற்பத்தொழிலே பெரியதாகிவிடும். ஆகையால் எக்காரியத்தையும் சிறியதென்று அலட்சியம் செய்யலாகாது என்பது கருத்து.) (3)

அலைகள் தாழுஞ் செடிகளை அசைத்துக்கொண்டிருக்கும் சோலை பொருந்திய குளிர்ந்த கடற்கரையை யடுத்த நாட்டையுடைய பாண்டியனே! (ஒரு காரியம்)செய்யக்கூடாததாயிருந்தாலும் (சிரமப்பட்டுச்)செய்து ஒருவகையாலும் தளர்ச்சியடையாமல் நிற்பதே ஆண்மையாகும். (எல்லாம் எளிதில்) கைகூடுமானால் பெண்களும் (செய்து முடித்து) வாழமாட்டார்களோ? (4)

(உலகத்தில்) நல்ல குலமென்றும் தீய குலமென்றும் (சொல்வதெல்லாம்) சொல்மாத்திரமேயல்லாமல் (அதற்கு) யாதொரு பொருளுமில்லை. (ஆனால்) சிறந்த செல்வமொன்று மாத்திரத்தாலோ? (அல்ல) தவமும் கல்வியும் முயற்சியும் என்னுமிவைகளாலேயே குலமாகும். (பொருள், தவம், கல்வி முயற்சி இவற்றை யுடையோரே மேற்குலத்தோராவர் என்பதாம்.)()

அறிவுடையார் ஒரு காரியத்தைச் செய்துமுடிக்கும் வரையும் (தங்கள்) அறிவை உள்ளடக்கிக்கொண்டு தம் வலிமையைப் பிறரறியச் சொல்லார். (பிறருடைய) மனவலிமையை (அவர்களது முகம் கண் முதலிய)

அவயவங்களின் குறிப்பினுல் ஆராய்ந்தறியும் புத்தி நுட்பத்தில் உலகம் அடங்கி யிருக்கின்றது. (6)

செல்களால் தின்னப்பட்ட ஆலமரத்தை அதன் வீழ்தானது ஆதாரமாய்த் தாங்கிக்கொண்டு நிற்பதுபோல, தன் தந்தையிடம் தளர்ச்சி தோன்றினுல் அவனுடைய பிள்ளையானவன் தன் முயற்சியால் மறைக்க (அத்தளர்ச்சி) நீங்கும். (ஆலமரத்துக்கு விழுதானது மகன்போன்றது என்றறிக.) (7)

யானையினுடைய புள்ளிகள் பொருந்திய முகத்தைப் புண்படுத்தும் கூர்மையான நகங்களையும் வலிய கால்களையுமுடைய சிங்கத்தைப்போன்ற வலிமையுடையவர்கள் இழிவடைந்து வீட்டிலேதானே யிருந்துகொண்டு யாதொரு முயற்சியுமில்லாமல் சாக நேர்ந்தாலும் இழிவு நேரும்படியான காரியங்களைச் செய்வார்களோ? (செய்யார்.) (8)

இனிமையான கரும்பிலிருந்துண்டான திரண்ட தாளையும் (குதிரையின்) பிடரி மயிர்போன்ற கற்றையையுமுடைய புஷ்பமானது (கரும்பின் பூவானது) தேனுேடு கூடிப் பரிமளிக்கின்ற வாசனையை இழந்திருப்பதுபோல, தன் பெயரை நிலை நிறுத்துவதற்குக் காரணமான பெரிய முயற்சியில்லாவிட்டால் (அப்படிப்பட்டவர்களுக்கு) மிகச் சிறந்த நற்குடிப் பிறப்பால் யாது பயனுண்டாகும்? (ஒரு பயனு முண்டாகாது.) கரும்பின் பூவானது நல்ல இடத்தில் தோன்றியும் வாசனை யில்லாமையால் ஒருவராலும் மதிக்கப்படுவதில்லை. அதுபோல, உயர்குடியிற் பிறந்தாலும் முயற்சியால் தன் பெயரை எங்கும் பரப்பாதவன் பயனற்றவனேயாவன் என்பது கருத்தாம்.) (9)

(முற்காலத்தில் பிரசித்தமாக அன்னதானஞ் செய்துவந்த வள்ளலாகிய) பெருமுத்தரையர் என்பவர் மிகவும் மகிழ்ந்து இடும்பொறிக்கறியையும் சோற்றையும் புசிப்பார் கீழ்மக்கள். பொறிக்கறியின் பெயரையும் அறியாதவர் மிகவும் விரும்பிச் செய்த (தமது) முயற்சியால் சம்பாதித்து உண்ட கூழும் (சிறப்பினுல்) அமுதத்திற் கொப்பானதாகும். (10)

(தொடரும்.) பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.

---

## கண் சிறந்ததா? காது சிறந்ததா?

இத்தகைய வினுக்களுக்கு அநேகரால் எளிதாக விடையளிக்க இயலாது. நமது வாழ்நாட்களில் நாம் கண்ணுலுங் காதாலும் அடையும் பயன்களை யாரே கழறவல்லார்? ஆயினும் அநேகர் செவியினுங் கண்ணே சிறப்புடையதெனக் கூறி நிற்பர். அன்னவர் அவ்வாறு சொல்ல யாது காரணத்தை மேற்கொண்டனரோ? அறிகிலோம்! ஆண்டவனுல் படைக்கப்பட்ட இவ்வவனியில் சிற்றின்பங்களை யடைதற்குக் கண்ணே காரணமென நாமெவ்வாறியம்பலாகும். அன்றிக் காதுதான் காரணமென எவ்

வாறிசைக்கலாகும். (உதாரணமாக) நமக்குச் சினிமடோகிராபை (Cinematograph)ப் பார்க்கும்போதுண்டாகும் இன்பத்திற்குக் கண்ணே காரணமெனில்—நாம் கிராமபோன் (Gramaphone) கேட்கும்போது உண்டாகும் சுகத்திற்குச் செவியன்றோ காரணமாகிறது ஆதலால் சிற்றின்ப காரணத்தின் சார்பாக இன்னதுதான் சிறந்ததெனக் கூறவியலாது.

இனி, பேரின்ப காரணத்தின் சார்பாக காதே சிறந்ததெனக் கூற முயலுவோம்.

சிலர், "மனத்தின் சேர்க்கையில் இருக்குங் கண்ணே ஆரோபத்திற்குக் காரண" மெனச் சொல்லுகின்றனர். அதற்கு உதாரணங்களாக அன்னவர், ரஜ்ஜு, சர்ப்பம்போல் தோன்றுவதையும், கிளிஞ்சல் வெள்ளிபோல் தோன்றுவதையும் சொல்லுகின்றனர். ஆனால் அதற்கு மாறுபாடாகச் சிலர் மனத்தின் சேர்க்கையால் செவியே ஆரோபத்திற்குக் காரணமென்றிசைத்து அதற்குத் திருஷ்டாந்தமாக நாம் பீதி அடைந்து கலவரமாகவிருக்குங் காலத்திற் பலவித விகார சப்தங்கள் நம் செவியிலேறுவதைக் கூறுகின்றனர். ஆகவே இவ்விரண்டில் எது மற்றொன்றைக் காட்டினுஞ் சிறந்ததெனக் கூற இயலாமற் போகின்றது.

இப் பூவுலகின்கண் எல்லாம்வல்ல எம்பிரானால், ஆன்மாக்கள் தமது வாழ்நாட்களில் இன்பங்களை அனுபவிக்கும்பொருட்டு, பற்பல செல்வங்கள் ஏற்பட்டுள்ளன எனினும் அவைகளில் சிறந்தவை கல்விச்செல்வம், பொருட்செல்வம் ஆகிய விரண்டே. இவ்விரண்டினுட் சிறந்தது கல்விச் செல்வமே என்பது பெரும்பான்மையோரது கொள்கை. இத்தகைய கல்விச்செல்வப்பேற்றை யடைதற்கு எது முக்கிய சாதகமாயிருக்கிறதோ அதுவே மற்றொன்றைக் காட்டினுஞ் சிறப்புடையதெனக் கூறுவோமாக:-

இதுபற்றி நமது "ஆனந்தபோதினி"யில் தொகுதி 9. பகுதி 9-ல் 341-வது பக்கத்தில் "செவிச்செல்வம்" என்ற வியாசத்தில் எழுதியிருப்பதைக் காண்க. அது வருமாறு :—

"இக் கல்விசசெல்வம் இருவகையாற் பெறலாம். ஒன்று கற்றுணர்ந்த வல்லுநர்பாற் சென்று, அவர்கட் கூழியம்புரிந்து, அவர்கள் நீண்டகாலமாய் சேமித்துவைத்திருக்கும் அரும்பெரும் பொருள்களாய உறுதிப் பொருள்களென்னு முண்மைகளைப் பன்முறை கேட்டுச் சிந்தித்துணர்தல்; மற்றொன்று தானே எவருடைய உதவியுமின்றித் தனதறிவைக்கொண்டே பன்முறைபயின்று ஆய்ந்து தெளிந்துணர்தல். முன்னையதே இவ்விரண்டினுள்ளும் சாலச் சிறப்புடையது. எங்ஙனமெனில் தானே கற்றுத் தெளிதலில் பிழைகள் நேரிடக்கூடும். அன்றியும் பழக்கத்திற் கொணர்தலுமருமை. கேட்டலிலோ அக்குறையில்லை. அறிஞர்கள்பால் வழிவழியாகக் கேட்டுணர்ந்த பெரியோர்களிடத்தி லொன்றைக் கேட்பதில் பிழைகளிருத்தலரிது. ஆசிரியரிடத்துந் தம்மையொத்த சீடர்களிடத்தும் அவ்வப்போது தமக்குண்டாகும் ஐயங்களையும் நீக்கிக்கொள்ளலாம். அன்றியும்

குருகுலவாசஞ் செய்யும்போது குருவினதுபதேசமொழிகளை யனுபவத்திற் பெற்றுக்கொள்ளப் பழகுதலுமியல்பு. இக்கருத்து கீழ்வரும் நன்னூற் சூத்திரங்களாற் புலனாகும் :—"ஆசானுரைத்தமை * * * * * மாண்புடைத்தாகும்." இதுபற்றியே தமிழ்ப்பெரு மூதாட்டியாம் ஒளவையார் "கேள்வி முயல்" எனவும், ஆன்றோர்கள் "கற்றலிற் கேட்டலே நன்று" எனவும் அறிவுறுத்திப் போந்தனர்.

* * * * * *

ஒருவன் அறிவு நூல்கள் பலவற்றையும் ஓதாதுணரும் பேற்றை இயல்பாகவே பெற்றுளானாயினும் தக்கவர்பால் அந்நூல்களைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிதல்வேண்டும். அத்தகையாரே பொதுமக்களாற் போற்றற்குரியராவர். இதுபற்றியேயன்றோ சர்வேஸ்வரனின் சாக்ஷாத் அம்சமாய ஸ்ரீராமபிரான் வசிஷ்ட விசுவாமித்திரர்களிடத்தும், ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சாந்தீபமுனியிடத்துங் கலைகளைக் கற்றனர்? அன்றியும் ஒருவன் கல்லாதவனாயிருப்பினும் அறிவாளிகளிடத்தில் உண்மைப் பொருள்களைக் கேட்டுணர்ந்திருப்பின் அவைகள் அவனுக்குத் தளர்ச்சிவந்த விடத்துப் பேருதவி புரிவனவாகும். சிவபெருமானாரது திருக்கண்ணில் இரத்தம் வடியக் கண்டு, அஃது நிற்குமாறு காணாது பலவாறு துயருற்றுத் தியங்கிய கண்ணப்பநாருக்கு, "ஊனுக் கூனப்புதல்வேண்டும்" என்னுங் கேள்வியறிவு தக்க சமயத்தில் பேருதவி செய்ததன்றோ? இதுபற்றியே "கற்றிலனாயினுங் கேட்கவஃதொருவற்—கொற்கத்தினாற்றாந் துணை" எனத் தெய்வப் புலமைத் திருவள்ளுவனாரும் கூறியருளினர். அன்றியும் பல கலைகளும் வல்ல காண்டீவதாரியான பற்குனன் போர்க்களத்தை நண்ணியதுந் தனது செயலால் விளையப்போகுந் துயரங்கட் காற்றானாகி, செயலற்றுச் சோர்ந்து வீழ்ந்த விடத்து, ஆபத்சகாயனான ஆதிநாதனது திவ்யோபதேசங்களைச் செவியுற்றபின்னரன்றோ, தனது ஜாதிதர்மத்தையும் கடமையையும் வீரத்தையுமுணரப்பெற்றுப் போர்க்கெழுந்து பொருது புகழ் பூண்டனன்.

எண்குணமுடைய இறைவனை அடைதற்பொருட்டு மக்கட்கெளிதிலுதவி புரிவதெது? கேள்வியறிவேயன்றோ? இக்கருத்தை நனிவிளக்குதற்பொருட்டே சிவானுபூதி கைவரப்பெற்ற தவப்பெருஞ் செல்வராந் தாயுமானவர்,

"பெற்றவர் பெற்ற பெருந்தவக் குன்றே!
பெருகிய கருணைவா ருதியே!
நற்றவத் துணையே! ஆனந்தக் கடலே!
ஞாதுரு ஞானஞே யங்கள்
அற்றவர்க் கறுத நட்புடைக் கலப்பே!
அநேகமாய் நின்னடிக் கன்பு
கற்றதுங் கேள்வி கேட்டதும் நின்னைக்
கண்டிடும் பொருட்டன்றோ காணே"—எனவும்,

"கேட்டன்முத னன்காலே கேடிலா நாற்பதமும்
வாட்ட மறவெனக்கு வாய்க்குநா ளென்னாளோ"

எனவு மருளிச்செய்வாராயினர். அன்றியுங் கேள்வி யறிவினையுடையவர்கள், இப்பூவுலகத்தினராளுனும் தேவர்களோடும் ஒப்பாவரென்பதை,

"செவியுணவிற் கேள்வி யுடையா ரவியுணவி
னன்றாரோ டொப்பர் நிலத்து"

என நாயனார் பொய்யாமொழியிற் புகன்றுளாரன்றோ?

இதனால் கண்ணினுங் காதே சிறந்ததெனை இயம்ப நேருகின்றது. ஆதலினன்றோ வான்றோருமதை "செவிச்செல்வம்" என்று செல்வத்திற்குச் சமதையாக பாவிக்கின்றனர்.

"செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வஞ்
செல்வத்து ளெல்லாந் தலை"

என்னும் நாயனாரினமுதவாக்காற் செவிச்செல்வத்தின் பெருமையை அறியலாகும். செவியின் வேலையாகிய கேட்டலின் சிறந்த மேன்மையாலன்றோ ஆன்றோரதைச் செல்வத்துள் ஒன்றாகப் பாவித்ததுமன்றி, அதைச் செல்வங்கள் யாவற்றினும் மேலானதாகவு மதிக்கின்றனர். கண் காதைக்காட்டினுஞ் சிறந்ததாகவிருப்பின் அதை ஆன்றோர் ஒரு செல்வமாகப் பாவித்து, எல்லாச் செல்வங்களினுஞ் சிறந்த செவிச்செல்வத்தினும் மேலானதாக மதியாதிருப்பரோ? இரார்! இவைகளை நன்காராய்ந்து நோக்குங்கால் என் சிற்றறிவுக்குக் கண்ணினுங் காதே சிறப்புடைத்தெனத் தோன்றுகிறது.

நானிவ்வளவு சொல்லிக் கண்ணினுங் காதே சிறந்ததெனினும் என் மனதுள் ஐயஞ் சற்று தோன்றுகிறது. ஒருகால் இது தப்பிதமாயிருக்கலாகும். ஆதலின் கற்றறிந்த கனதனவான்கள் அடியேன்கொண்ட சந்தேகத்தை நிவர்த்திசெய்ய வேண்டுகின்றேன்.

அ. ப. சுப்பிரமணியன்,
ஈஸ்வரன்கோவில் தெரு, கோபிசெட்டிபாளையம்.

---

## ஆரிய சித்தாந்தம்.

### (ஆசாரம்.)

(432-ம் பக்கத் தொடர்ச்சி.)

வேதங்களில் நாலாம் வருணத்தாருக்குச் சந்நியாசம் விதிக்கப்படவில்லை யென்றாலும் ஆகமங்களில் விதிக்கப்பட்டிருக்கிறது. ஆகமவிதியும் வேதவிதியும் ஒன்றோடொன்று ஒன்றுபட்டனவென்பர். ஆயினும் இரண்டும் மோட்சமார்க்கமேயாம். ஆயினும் தாந்திராசாரம் என்கிற ஆகமானுஷ்டானமுடையவர்கள் வைதிக மார்க்கத்தை அனுஷ்டிக்கக் கூடாதென்றும், வைதிகமார்க்கத்தர் ஆகமமார்க்கத்தை அனுஷ்டிக்கக்கூடாதென்றும் சூத சங்கிதை வரையறுத்துக் கூறியிருக்கின்றது.

பிரமசாரிக்கு வேதமோதலும், சமிதாதானம் என்னும் அக்கினி காரியம் செய்தலும், குருபணிவிடை செய்வதில் வழுவாமலிருப்பதும், பிட்சை யெடுத்து உண்பதும் முக்கிய ஆசாரமாம். கிருகஸ்தர்களுக்கு அக்கினி ஹோத்திரம், ஔபாசனம் என்கிற அக்கினி காரியங்களைச் செய்யவேண்டும். ஔபாசனம் என்பது ஸ்மிருதி மார்க்கம். அன்புடைமையும், அதிதிகளை உபசரித்தலும், தேவபூஜை செய்தலும் முக்கிய தர்மமாம். வானப்பிரஸ்தர்களுக்குச் சடைமுடி நகம் இவைகளை வளர்ப்பதும், மனிதசஞ்சாரமில்லாத வனத்தில் வசிப்பதும், காய், கனி, கிழங்கு, சருகுமுதலிய வனத்திலுண்டாகும் பதார்த்தங்களைப் புசிப்பதும், சாஸ்திரங்களை ஆராய்வதும், உடல்வருந்தத் தவம்புரிவதும் ஆசாரமாம். சாஸ்திர ஆராய்ச்சி முதன் மூன்று ஆச்சிரமத்தாருக்கும் உரியது. சந்நியாசிகளுக்குப் பகலில் மூன்று வேளையிலும் ஸ்நானம் செய்வதும், காஷாய தண்டுகமண்டலந் தரிப்பதும், பிரணவ ஜபம் செய்வதும், பிரமதியானத்திலிருந்து நிஷ்டை கூடுவதும், பிட்சை யெடுத்துப் புசிப்பதும், ஒரு கிராமத்திலும் ஒரு நகரத்திலும் நாலு நாட்கள் தங்கியிருப்பதும், ஒருவருடனும் கூடாமல் தனித்து வசிப்பதும், ஆற்றங்கரை குளத்தங்கரை மரத்தடிகளில் தங்குவதும், பிட்சாகாலந் தவிர மற்ற காலங்களில் கிராம நகரங்களுக்குள் செல்லாமலிருப்பதும் சந்நியாசிக்குரிய ஆசாரமாம். இவ்வாசாரங்களினின்று சிறிது வழுவினும் சந்நியாசாச்சிரமம் கெட்டு நரகப்பிராப்தியை உண்டாக்கும். இவற்றில் வழுவாமலிருப்பவன் பிரமமேயாவான்.

நான்கு ஆசிரமத்தாருக்கும் நாலு வருணத்தாருக்கும் பொதுவாக உபவாசமென்று ஒன்றுண்டு. உபவாசம் என்றால் ஆகாரங்கொள்ளாமல் இருப்பது என்பதுதான் சாதாரணமாக எல்லாராலும் கொள்ளப்படுங் கருத்து. அப்படியல்ல. ரிஷிகளாலும் கிருகஸ்தாச்சிரமத்தாராலும் அனுஷ்டிக்கப்படும் உபவாசம் இந்தக் கருத்துக்கு மாறாகவே யிருக்கிறது.

பகலில் காலை முதல் பகல்காலம் வரைக்கும் தண்ணீர்கூடக் குடியாமல் இருக்கவேண்டும். மூன்றாம் ஜாமத்தில் ஒருவேளை புசித்துப் பிறகு மறுநாள் பகற்காலம் வரைக்குந் தண்ணீர்கூட அருந்தாமலிருக்கவேண்டும். இது ஒருவகை உபவாசம். இப்படி மூன்று வருஷம் நடந்தால் அவன் சொர்க்கம் அடைவது நிச்சயம் என்று நூல்கள் கூறுகின்றன.

ஒரு நாளைக்கு இரண்டு வேளை புசித்திருப்பது ஒருவகை உபவாசம். பகல் பதினைந்து நாழிகைக்குமேல் புசிப்பதும் அதுவரை நீர் கூட அருந்தாமலிருப்பதும், அதன்பின்னும் நீர்கூட அருந்தாமலிருந்து இரவு ஜாமத்துக்குள் புசிப்பதும் ஒருவகை உபவாசம். இந்த உபவாசம் ஆறு வருஷம் செய்யத்தக்கது. இவனுக்கும் சொர்க்கம் எளிதில் கிடைக்கும். வனத்தில் வசிப்போர் காய், கனி, கிழங்குகளைப் புசித்து இந்த உபவாசத்தைச் செய்வார்கள். கிருகஸ்தாச்சிரமத்தாரும் காய் கனிகளைப் புசித்து உபவாசம் செய்யலாம். பகலில் ஒருவேளை புசித்து மேற்குறித்த நெறிதவறு

மல் இரவில் கனிகளைப் புசித்து இருப்பதும் உபவாசமாம். இருவேளை அல்லது ஒருவேளை பலாகாரம் புசித்தும் உபவாசமிருக்கலாம். பலம் என்பது செடி, கொடி, மரங்களிலுண்டாகும் காய் கனிகளுக்குப் பெயராம். இது பழம் என்று தமிழில் கூறப்படுகிறது. அடை, தோசை, உப்புமா, இட்டலி, கொழுக்கட்டைகளைப் புசிப்பது பலாகாரமாகாது.

பூரணை, அஷ்டமி, சதுர்த்தசி, ஏகாதசி, திரயோதசி, சஷ்டி ஆகிய இந்தக்காலங்களில் ஒருவேளை புசிப்பதும், அல்லது பலாகாரங்கொள்வதும் கிருகஸ்தருக்குரிய உபவாசங்களாம். மற்றைய நாட்களில் இருவேளை மேற்குறித்த விதி தவறாமல் புசிப்பதும் நன்றே. இதை வைத்திய நூல்களும் கூறுகின்றன. ஆனால் சிறிது விசேஷம் கூறுகின்றது. புசிக்கும் அளவும் ஒன்றும் தின்னக்கூடாது. புசிக்கும்போது அன்னம் கறிகள் எல்லாம்சேர்ந்து அரை வயிற்றுக்குப் புசிக்கவேண்டுமென்றும், கால் வயிறு நீரால் நிரப்பவேண்டுமென்றும் ஆக முக்கால்வயிறு நிறைய உணவுகொண்டு பிராணவாயு சஞ்சரிப்பதற்குக் கால்வயிறு விட்டுவிடவேண்டும் என்றும் கூறுகின்றது. இப்படி முக்கால்வயிற்று உணவுகொண்டு போஜனகாலங்களுக்கு இடையில் ஒன்றும் புசியாமலிருப்பவன் நோயற்றுத் தீர்க்காயுசுடையவனாய் அந்தத்தில் நற்கதியை அடைவான் என்றும் கூறுகின்றது. ஸ்மிருதிகளும் இதை அனுசரித்தே கூறுகின்றன. இவையன்றி மாத உபவாசம், பட்ச உபவாசம், வார உபவாசம், ஒன்றுவிட்டொருநாள் புசித்தல் முதலிய உபவாசங்களும் உண்டு. அவைகள் ரிஷிகளுக்கே உரியன.

இனி தேவோபாசனை செய்கிறவர்கள் அந்தத் தேவதைக்குரிய கிழமை, நட்சத்திரம், திதிகளிலும், இவ்வுபவாசத்தை அனுஷ்டிக்க விதியுண்டு. அமாவாசை, மாதப்பிறப்பு, அயனப்பிறப்பு, பிதா மாதா இறந்த திதி, அதற்கு முன்னாள் பின்னாள் இவற்றிலும் உபவாசமிருக்க விதியுண்டு. இது பிதிர்த்தேவதைகளைக் குறித்துச் செய்யப்படுவது.

ஆசாரம் கூற வந்தவிடத்து உபவாசம் கூறியதேன் எனில், உபவாசமும் தீர்த்தயாத்திரையும் ஆரியாசாரங்களில் சிறந்தவை யென்று கூறிப் பாரதம் இவற்றையும் ஆசாரத்தில் சேர்த்தது. ஆகையால் இவைகளும் ஆரியாசாரமேயாம். சற்குலத்திற் பிறந்தவர்கள் இவ்வாசாரங்களையும் அவசியம் கைக்கொள்ளவேண்டுமென்று பாரதம் கூறுகின்றது.

தேவாசுரர்களுக்கு யுத்தம் உண்டாயிற்று. அப்போது தேவர்கள் தோற்றார்கள். அசுரர்கள் ஜயித்து மூவுலகங்களையும் கைக்கொண்டு எதிரின்றி அரசுபுரிந்தார்கள். தேவர்கள் மனம் வருந்தி யாது செய்வது என்று ஆலோசித்தார்கள். அப்போது பிருகஸ்பதி பகவான் இந்திரனை நோக்கி அரசனே! ஒரு இரகசியம் சொல்கிறேன் கேளும். இந்த இரகசியம் ரிஷிகளிடத்தில் மாத்திரமிருக்கிறது. யாகயக்ஞங்கள் செய்யத்தக்க பொருள் இல்லாதவர்கள் தீர்த்தயாத்திரை செய்து ஆலயதரிசனமும் செய்தால் அநேக அசுவமேதம் இராஜசூயம் செய்த பலன் சித்திக்கும். அதனால் பாபங்

கள் ஒழியும். பாபம் ஒழிந்தவனுக்கு எல்லாம் சித்தியாகும். அசுரர்களுக்கு இது தெரியாது. அவர்கள் பாபத் தொழிலையே செய்கிறவர்கள். அவர்களுக்குப் பாபம் ஏறும். அதனால் தவப்பலன் குறையும். அப்போது தீர்த்தயாத்திரையால் பாபமொழிந்த தேவர்கள் ஜயம்பெறுவார்கள் என்று கூறினார். அதுகேட்ட இந்திரன் மகிழ்ந்து தேவர்களுடன் தீர்த்தங்கள்தோறும் சென்று புலனை யடக்கிக் காமக்குரோதாதிகளை வென்று தீர்த்தயாத்திரை செய்தான். பிறகு பிரகஸ்பதியின் உத்தரவின்மேல் அசுரர்களை வென்று மூவுலகங்களையும் கைக்கொண்டு அரசுபுரிந்தான். ஆதலால் ஏ யுதிஷ்டிரா! நீயும் தீர்த்தயாத்திரை செய். உன் பாபங்கள் ஒழிந்து உன் சத்துருக்களை வெல்வாயென்று நாரதமஹாமுனிவர் தர்மபுத்திரருக்கு உபதேசித்ததாகப் பாரதங் கூறுகின்றது.

இந்தத் தீர்த்தயாத்திரை செய்கிறவன் மித போஜன நியமத்துடனிருக்கவேண்டுமென்று நூல்கள் கூறும். அந்த மிதபோஜனமென்பது தான் முன்னே சொன்ன உபவாசம். மத்தியான்னம் புசிக்கிறவரைக்கும் தண்ணீர்கூட அருந்தாமலிருந்து போஜனம் செய்வதும், போஜனம் செய்தபின்னும் இந்தவிரதத்தைக் கைக்கொண்டு இரவில் புசிப்பதும் ஒருவகையான உபவாசமென்றும், இந்த உபவாசம் தவறுவாராமல் ஆறுவருஷம் செய்கிறவன், ஆயிரம் அன்னங்களால் சுமக்கப்படும் தெய்வ விமானத்தில் ஏறிக்கொண்டு சொர்க்கம் போகிறான் என்றும், நியமந்தவறாமல் ஒருவேளை மாத்திரம் புசித்து மூன்று வருஷம் விரதம் இருப்பவன் மயில்களால் சுமக்கப்படும் விமானத்தில் ஏறிக்கொண்டு சொர்க்கலோகம் போவான் என்றும், ஆயுள்பரியந்தம் இந்த விரதங்களில் ஒன்றைத் தவறாமல் செய்துகொண்டிருப்பவன் பிரமலோகத்தை அடைந்து பின் மோட்சத்தை அடைவான் என்றும் பாரதத்தில் வியாசர் கூறினார். இது சதாசாரமென்று நூல்களால் ஒப்புக்கொள்ளப்பட்டது. ஆதலால் இந்த உபவாசத்தையும் ஆசாரத்தோடு சேர்த்து எழுதினோம். இரண்டுவகையான இந்த விரதங்கள் பிறருக்கு இம்சையில்லாமலும், தன் சரீரசுகத்துக்குக் குறைவில்லாமலும் எல்லாராலும் அனுஷ்டிக்கத்தக்கதாதலால் அவ்விரண்டையுமே கூறினோம். இது வேத வாக்கியமாம். ரிஷிகள் இதனை அனுஷ்டித்தே சர்வ சித்திகளையும் பெற்றார்கள். அறிவுருவமான பராபரப்பொருளையுந் தரிசித்து வாழ்ந்தார்கள்.

இந்தத் தவம் கிருகஸ்தாச்சிரமத்தாரால் எளிதில் அனுஷ்டித்துப் பெரும்பயன் பெறத்தக்கது. இதைப்பற்றி நித்தியவிதியில் விவரித்து எழுதினோம். மீண்டும் சிறிது கூறி அதை ஞாபகப்படுத்துகிறோம். இதுவும் ஆரியாசாரத்தில் சிறந்ததொன்றாதலால் என்க.

"அற்ற தறிந்தாங் கறப்பசித்துத் தீபனத்துக்
குற்றதறிந் துண்ண லுணவு."

என்று தேரைய முனிவர் கூறினார். இதனையே தேவரும் திருக்குறளில் மருந்து என்னும் அத்தியாயத்தில் கூறினார். அதாவது முன்னுள்

உண்ட உணவு ஜீரணமானதை அறிந்துகொண்டபின், நன்றாய்ப் பசி உண்டாகும்போது, தன் ஜீரண சக்திக்கும், சுகத்துக்கும் ஏற்ற பதார்த்தங்களை உண்பதே உணவாம் என்றார். "அறப்பசித்து" என்றதனால் போஜனம் செய்யும் அளவும் ஒன்றும் புசிக்கக்கூடாது என்பது விளக்கப்பட்டது காண்க. "அற்றதறிந்து" என்றதனால் அகாலத்தில் புசிக்கப்படுவது தண்ணீர், வெந்நீரானாலும் பசியை மந்தப்படுத்தும் என்பது கூறப்பட்டது. அப்படியானால் நல்ல பசியுண்டாகாது. அதனாலே திருக்குறளுரையாசிரியர், பரிமேலழகர் "முன்னாள் உண்ட சோறு ஜீரணமானாலும் அவ்வுணவின் சக்தி வாசனா ரூபமாய் வயிற்றில் தங்கியிருக்கும். அப்போது புசித்தால் அது விஷமாய் மாறும் என்பதைக் குறித்து அதனாலேதான் அறப்பசித்து என்றார்" என்று கூறினார். ஆதலால் சரியான உணவு கொள்ளுமளவும் யாதொன்றையும் உட்கொள்ளாமல் இருப்பதே சரியானது என்பது காண்க.

உணவு உண்டல், பருகல், நக்கல், மென்றல் என்று நால்வகைப்படும். உண்டல் சோறு, பருகல் பாயசம் முதலான திரவபதார்த்தம், நக்கல் துகையல் பச்சடி முதலியன, மென்றல் கறி அப்பளம் வற்றல் வடை முதலியன. இவற்றுள் கறி முதலியவற்றையே மென்று தின்னவேண்டும் என்றும், அன்னத்தை உருண்டையாகவே விழுங்கவேண்டும் என்றும், மென்று தின்றால் அஜீர்ணம், குன்மம் முதலிய நோய்களுக்கிடமாம் என்றும், மலச்சிக்கல் அவசியம் உண்டாகும் என்றும் வைத்திய நூல்கள் கூறுகின்றன. ஆதலால் அன்னத்தை ஒருபோதும் மென்று தின்பது கூடாது. இதன் விரிவை நித்தியவிதி போஜனப் பிரகரணத்தில் கூறினோம். ஆண்டுக் காண்க. இதனால் ஆரியர் காலையில் எழுந்திருந்தது முதல் இரவில் தன்னை மறந்து நித்திரை செய்யுமட்டும் செய்கிற சன்மார்க்கச் செய்கைகளெல்லாம் ஆசாரமென்றே கூறப்படும். ஆரிய வம்சத்தில் பிறந்தவர்கள் இந்த ஆசாரங்களில் வழுவாமல் நடக்கவேண்டும். அப்பொழுதுதான் நாம் சரியான ஆரியர்களாவோம். ஆயுட்காலத்தை நமது சாஸ்திர ஆராய்ச்சியால் கழிக்கவேண்டும். உண்மையுணர்த்தும் ஆசிரியரைத்தேடியடைந்து அவர் மூலமாக இதிகாச புராண சாஸ்திரங்களின் உண்மைக் கருத்தைக் கேட்டுத் தெளியவேண்டும். தெளிந்ததைச் சிந்தித்து உண்மையை உணரப் பிரயாசைப்படவேண்டும். அந்நிய தேசத்தாரால் கண்டு அறியப்படாத அளவற்ற இரகசியங்கள் நமது சாஸ்திரங்களில் நிறைந்திருக்கின்றனவாதலால் அவற்றின் உண்மைகளைக் கண்டறிய முயல்வதும் ஆரியர்களுக்கு இன்றியமையாத கடமையேயாம்.

ஆசாரம் முற்றிற்று.

**சிவானந்தசாகர யோகீஸ்வரர்.**

---

**சந்தாதாரர்களுக்கு.**—சந்தா நம்பர் தெரியாதவர்கள் மாத மாதம் வரும் சஞ்சிகையின் மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் நம்பரைப் பார்த்துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிறோம்.

# "உன்னை நேசி."

நற்கதியடைந்து உய்தலையே தன் சீவியத்தின் இலக்காகக்கொண்டு உழைத்துவந்த ஒருவன் ஒரு மகானையடைந்து பிறவிப்பிணி நீங்கி முத்தியின்பத்தைப் பெறுவதற்கு ஏற்ற ஓர் உபாயம் சொல்லிக் கொடுக்கும்படி வேண்டி நின்றனன். அப்பெரியவர் அவனைப்பார்த்து, " நீ உன்னை நேசி; சுகம் பெறுவாய் " என்றனர். அவன் அவர் சொல்லிய வாக்கியத்தின் பொருளை உணராமல் மனக்கவலை நிறைந்தவனாய், திரும்பவும் அவரிடத்தில் அநேகமுறை அக்கேள்வியைக் கேட்டான். அவன் திருப்தியடையாததை முற்றாய் அறிந்துகொண்டும் அம்மகாத்மா முன்சொன்ன கருத்தமைய, " நீ உன்னை உண்மையாய் நேசிப்பாயானால் தடையின்றி முத்திப் பெரும் பேற்றைப் பெற்றுய்வாய்" என்று சொல்லி அவனை யனுப்பினார்.

ஒருவன் தன்னிலும் பார்க்கப் பிறரையே அதிகமாக நேசித்தல் வேண்டுமென்றும், தன்னயங் கருதலை முற்றாய் ஒழித்தல் வேண்டுமென்றும் சமய சாஸ்திரங்களும் சன்மார்க்க நீதிநூல்களும் கூறும். அப்படியிருக்கவும் ஒருமகான் " உன்னைநேசி " என்று ஆன்மவிசாரம் நிறைந்து ஆறுதலற்றிருக்கும் ஒருவனைப் பார்த்துச் சொல்வது எவ்வாறு பொருந்துமென்று அனேகர் எண்ணுதல் கூடும். அப்படி நினைப்பவர்கள் "உன்னை நேசி " என்னும் வாக்கியத்தால் உண்மையாய் நிறைந்துள்ள புதைபொருளைச் சற்று ஆராய்ந்து தெரிந்து கொள்வது மிகவும் அவசியம்.

எவனொருவன் தன்னை உண்மையாய் நேசிக்கிறானோ அவன் தன்னுடைய தேகம் மனம் முதலியவைகளுக்கு இடையூறான ஒன்றையும் சிந்திக்கவாவது செய்யவாவது துணியான். ஏனெனில் அவனுடைய ஈடேற்றத்துக்கு இவைகளே இன்றியமையாத கருவிகளாயிருக்கின்றன. தேகசுகத்துக்கு மாறான அனேக காரியங்களை நம்மவரிற் பெரும்பாலார் செய்வதை நாள்தோறும் நாம் காண்கிறோம். அப்படிச் செய்பவர்களுள் சிலர் அறியாமையின் நிமித்தமாகவும், மற்றையோர் மன அடக்கமின்மை காரணமாகவும் தங்கள் தேகசுகத்தைக் கெடுக்கின்றனர். இவர்கள் தங்களுக்குத் தாங்களே சத்துராதிகளா யிருக்கிறார்க ளென்பதைச் சொல்லிக் காட்ட வேண்டியதில்லை. ஒருபிள்ளையை மிகவும் அன்பால் நேசிக்கும் தாயும் தகப்பனும் அந்தப் பிள்ளையைக் கேட்டை விளைக்கக்கூடிய ஒவ்வொரு தீமையிலு மிருந்து எவ்வளவு சாவதானமாய்க் காத்துக் கொள்ளுகின்றனர். அது போலவே இகத்துக்கும் பரத்துக்கும் நிலையான சந்தோஷத்தைத் தருதற்குச் சாதனமாயுள்ள நமது தேகத்தைச் சுகபலத்தோடு நீடித்திருக்கச் செய்தற்கு ஒவ்வொருவரும் தம்மைத்தாமே உண்மையாய் நேசித்தல் அவசியமல்லவா ? இவ்வுலகத்தில் அனேகர் தங்களை நேசியாமல் தங்களுக்குச் சுகம் தருபவைகள் போலத் தோற்றுபவைகளில் நேசம் வைத்துத் துன்புறுவது சாதாரணமா யிருக்கிறது. தேக சுகமில்லாத அனேகரை நாம் பலவிடங்களிலும் காணக்கூடியதா யிருத்தற்கு

இதுவே முக்கியகாரணம். மட்டற்ற மதுபானப் பாவிப்பாலும் வேறுபல துர்நடைகளாலும் எத்தனையோபேர் புத்தியீனமாய் மெத்தக் கேவலமான நிலையையடைகின்றனர். ஒருவன் தன்னை உண்மையாய் நேசியாதிருக்கும் வரையும் இதைத் தடுத்தற்குத் தக்கவழி காண்பது முடியாத காரியம்.

தன்னைச் சரியானவகையாய் நேசிப்பவனுடைய மனம் என்ன நிலையிலிருக்குமென்று சற்று ஆராய்வோம். அது தன்னை வாதிக்கும் கோபம், லோபம், பொறாமை, ஆசை முதலியவற்றிற்கு ஈடுபடாமல் எப்பொழுதும் மேலான விஷயங்களிலே நாட்டமுடையதாய்ச் சகல பிராணிகளிடத்தும் அன்பும் அனுதாபமும் நிறைந்ததா யிருக்குமல்லவா? ஒருவனுடைய தேகம் ஆன்மா இரண்டையும் இயக்குவதும் அவைகளை ஏதாவது ஒருவழியில் செலுத்துவது அல்லது நிலைபெறச் செய்வதும் அவனுடைய மனமேயென்பது நாமனைவரும் அறிந்த விஷயம். மனத்தையடக்கி அதற்கு அடிமைப்படாமல் அதை நல்லவழியில் நிறுத்த எத்தனிக்கும் ஒவ்வொருவனும் தன்னை மெய்யாய் நேசிக்க முயற்சிக்கிறனென்று சந்தேகமின்றிச் சொல்லலாம். பஞ்சமகா பாதகங்களையும் அஞ்சாது செய்பவர்கள் தங்களைக் கொஞ்சமேனும் நேசிக்கிறவர்களல்ல வென்பது நமது பொது அறிவுக்கு ஒத்த ஓர் உண்மை. கொஞ்சமேனும் மனச்சஞ்சலமின்றி அப்போதைக் கப்போது சுகம்போலத் தோற்றிப் பின்பு பெரும் தீமையை விளைக்கும் எத்தனையோ பெரும்பாவங்களுக்கு மனம் மனுஷனை ஈடுபடுத்துகின்றது. இந்தமனமே அவனை உலகப்பற்றெல்லாவற்றினு மிருந்து நீக்கி, ஒருபொழுதும் அழியாத நிலையுள்ளதாகிய பரவஸ்துவை உறுதியாய்ப்பற்றி நின்று உய்யும் வழியைக் காட்டவும் கருவியா யிருக்கின்றது. ஆதலால் தன்னை உண்மையாய் நேசிப்பவன் எவனும் மனம்போன போக்கெல்லாம்போகாது அதை அடக்கிச் சரியான பாதையில் விடுவான். தனக்கு என்ன கேடு சம்பவித்தாலும் காரியமில்லை யென்று நினைப்பவனுடைய மனம், நினைக்கத் தகாதவற்றை நினைத்து, செய்யா தொழிக்க வேண்டியவற்றைச் செய்ய அவனை ஏவி, எத்தனையோ சங்கடங்களுக்கு ஆளாக்கி, மீளாக்கவலையை நாள்தோறும் கொடுத்துக் கொண்டிருக்கும். "சினமடங்கக் கற்றாலும் சித்தியெல்லாம் பெற்றாலும், மனமடங்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே" என்று தன்னையுணர்ந்த தாயுமான சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளியிருக்கிறபடி, மனத்தைக் கருவியாகக்கொண்டு ஏதோ ஒருகாலத்தில் அழிந்துபோகும் உலகவிஷயங்களில் மாத்திரம் சித்தியெய்துவதிலும் பார்க்கக் கொஞ்சம் கொஞ்சமாய் மன அடக்கத்தைப்பெற முயலுதல் மானிடர்க்கு ஏற்ற ஓர் சிறந்தவழியாகும்.

"உன்னை நேசி" என்று ஒருவனைப் பார்த்து நாம் சொல்லும்பொழுது அவனுடைய தேகத்தை அல்லது மனதை அவன் நேசிக்கவேண்டுமென்று கருதுவதில்லை. ஆனல் ஒருவன் இவைகளைப் பாதுகாத்துத் தீய வழியிற் செல்லாது தடுப்பது அவனுடைய ஆன்மா நற்கதியடைதற்கு

அவசியம் தேவையாயிருக்கிறது. " நான் " என்று சொல்வது ஆன்மாவை யேயாகும். " உன்னைநேசி " என்று சொல்லும்பொழுது நித்தியவஸ்து வாய் உன்னிடத்துள்ள ஆன்மாவை நேசி, என்பதே கருத்தாகும். இந்த உலகத்திலேயுள்ளவர்களெல்லாரும் தங்களை, அதாவது, தங்களிடத்துள்ள ஆன்மாவை, உண்மையாய் நேசிப்பார்களாயின் இப்பூமி சீவன்முத்தர்கள் நிறைந்த ஓர் பூரணமான இடமாயிருக்கு மென்பதற்குச் சந்தேகமில்லை. இவ்வுலகம் அப்படி யில்லாததற்குக் காரணம் என்னவாயிருத்தல் கூடு மென்று உற்றுநோக்கு மிடத்து நம்மிற் பெரும்பான்மையோர் தம்மைத் தாமே நேசியாதவர்களாயும் இப்பிறவி எடுத்ததின் நோக்கத்தைத் தேராத வர்களாயு மிருத்தலினாலேதா னென்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெள்ளிதில் விளங்கக்கிடக்கின்றது.

அஞ்ஞான அந்தகாரத்தில் அமிழ்ந்தியிருக்கும் அனேகர் அல்லும் பக லும் தங்கள் நேரத்தைச் செலவழிக்கும் வகையைப் பார்த்தால் எவ்வளவு பரிதாபமா யிருக்கின்றது. தங்களுக்கு ஏதோ பெரிய நன்மை செய்கிற தாக எண்ணி, இவர்கள் பெண்சாதி, பிள்ளை, காணி, பூமி முதலியவற்றில் பற்றுவைத்துப் படும்பாடு கொஞ்சமல்ல. தன்னை உண்மையாய் நேசிக்கு மொருவன் கடவுளிடத்திலன்றி வேறொன்றிலும் பற்று வையான். ஏனெ னில் அவன் மற்றவைகளெல்லாவற்றையும் ஏதோ ஒரு காலத்தில் விட்டு நீங்கவேண்டியே வரும். கண்மணிபோல அல்லது அதிலுமருமையாக இருவர் ஒருவரையொருவர் நேசித்தாலும் அந்நேசம் நாசமாகுங்காலம் வரா மற்போகாது. கடவுளை முற்றாய்ப்பற்றித் தானும் கடவுளும் ஒன்றித்து நிற் கும் நிலையையே அவாவி நிற்குமொருவன் உலகப்பொருட்களில் ஆசை வைத்துக் கேடடையமாட்டான். அவன்தான் உண்மையாய்த் தன்னை நேசிப்பவனென்று சொல்லுதல் ஒருபோதும் தவறாகாது. உற்றார் உறவின ராதியோரில் முற்றாகப் பற்றுவைத்து அவர்கள்தாம் தங்களுக்குத் துணை யென்று நம்பியிருப்பவர்கள் ஒரு விஷயம் கவனிக்கவேண்டும். அதாவது தங்களுக்குக் கஷ்டகாலம் வரும்பொழுது அல்லது கொடிய நோயால் பீடிக்கப்பட்டுப் பாயும் படுக்கையுமா யிருக்கும்பொழுது தங்களுடைய சுற் றத்தார் மித்திரர் தங்களுக்கு மனப்பூர்வமாக உதவுகிறார்களா வென்பது தான். ஒருவேளை அவர்கள் உதவ நேர்ந்தாலும் அது அவர்களுடைய சுகம் கெடப்போகிறதென்ற அல்லது பிறருடைய உதவி அவர்களுக்கு எங்கே கிடையாமல் போகிறதோ என்ற எண்ணத்தினால் கவனிப்பார்க ளேயன்றி, நோயுற்றவர்களுடைய நன்மைக்காகமாத்திரம் அவர்கள் உள்ள படி அனுதாபப்படுகிறதைக் காண்பது மிகவும் அரிதாயிருக்கும். இதை இதுவரையும் கவனியாதவர்கள் இனிமேலாவது கூர்மையாக அவதானித் தால் தெரியவரும்.

நாம் இந்தப் பிறவியை எடுத்தது உலகத்திலுள்ள போக போக்கியங் களை அனுபவித்தற்காகவே யென்று ஒரு சமயமும் போதியாது. பிறவிப்

4

பெருங்கடலைக் கடப்பதற்கே நாம் இரவும் பகலும் உழைத்தல்வேண்டும். அப்படிச் செய்யாதிருக்கும்வரையும் நாம் நமக்கே பகைவர்களாவோம். பெண்டு பிள்ளை பண்டு பதார்த்தம் முதலியவைகளை எவ்வளவு அதிகமாக நேசிக்கிறோமோ அவ்வளவுக்கவ்வளவு நம்மைக் குறைவாக நேசிக்கிறவர்களாவோம். இதனால் பெண்சாதி பிள்ளை முதலியவர்கள்மீது அன்புவைக்கப்படாதென்பது கருத்தல்ல. அந்த நேசத்தால் நமக்கும் அவர்களுக்குமிடையிலுள்ள தொடர்பு புளியம் பழத்துக்கும் ஓட்டுக்குமுள்ள சம்பந்தமளவிலேயே இருத்தல் வேண்டும் என்பதே.

தன்னயங்கருதிப் பிறருக்குத் தீமை செய்பவன் தனக்கே கேட்டைத் தேடிக்கொள்ளுகிறானென்பதைப் பெரும்பாலும் மறந்துவிடுகிறான். பிறரை வஞ்சிப்பவன் தன்னையே வஞ்சிக்கிறான். இது நாம் அனுபவத்தில் கண்டறிந்த உண்மை. தன்னை ஒருவன் நேசிப்பதென்றால் பிறருக்கு அன்பு அனுதாபம் காட்டி, நடவாமலிருப்பதோடமையாது, அவர்களுக்கு இயன்றவரையில் கஷ்ட நஷ்டத்தையும் வருவித்தல் தடுக்கக்கூடியதல்லவென்று பலர் நினைக்கிறார்கள். இது மிகவும் பிழையான எண்ணம். உலகத்தில் பல பாகங்களிலும் வெவ்வேறு காலங்களில் தோன்றி மறைந்த பெரும் ஞானிகளனைவரும் தங்களை உண்மையாய் நேசித்து உன்னத பதவி எய்தினார்களன்றி, தாங்கள் ஈடேற்றம் அடைதற்பொருட்டு வேறு யாருக்காவது அவர்கள் ஒரு தீங்கும் விளைத்ததில்லை. அவர்களைப்போலவே நாமும் சீவித்தல் அத்தியாவசியகம்.

மேற்கூறிய அபிப்பிராயங்களைச் சுருக்கிக் கூறில், ஒருவன் தன்னை உண்மையாய் நேசித்தால்மட்டுமே ஈடேற்றமடைவானென்பதும், அதன் நிமித்தம் வேறொருவருக்கும் தீமை விளைத்தல் கூடாதென்பதும் உலகத்திலுள்ள ஒரு பொருளிலாவது நிலையான நேசம் வைத்தல் புத்தியல்லவென்பதும், கடவுளை மாத்திரம் நேசிப்பதுதான் தங்களை நேசிப்பதன் கருத்தென்பதும் அமையும். ஆதலால் நாம் பிறவியெடுத்ததின் நோக்கத்தைக் கனவிலும் மறவாது இறைவன் திருவடியை இடைவிடாது தியானித்து ஒவ்வொரு தொழிலைச் செய்யும்போதும் "தன்னை நேசிக்குமொருவன் இத்தொழிலைச் செய்தல் தகுமா?" என்று நம்மையே நாம் கேட்டுக்கொள்ளவேண்டும். இப்படிச் செய்துவருந்தோறும் முத்திப் பெரும்பேறு சித்தியடைதற்கு எத்தனிப்பவர்களாவோம்.

கா. சின்னப்பா, அளவெட்டி, யாழ்ப்பாணம்.

---

## தாசிகளின் முற்கால தற்கால நிலைமை.

தேவதாசி யென்றும், தேவர் அடியாள் என்றும் பெயர் பெற்றவர்கள் உருத்திர கணிகையர்களாவார்கள். இவர்கள் ஆதிகாலத்தில், உலகமெல்லாம் அநாதி நித்தியம், கர்த்தா ஒருவரில்லை, சிவன் முதலிய எல்லோரும்

அகித்தியர், வேதம் அநாநிகித்தியம் என்று கூறப்பட்ட மீமாஞ்சை சமயத்தைக் கைக்கொண்ட சில ரிஷிகளைச் சுத்தராக்கியருளத் திருவுளங்கொண்டுவந்த சிவபெருமானின் திருவருட் பார்வையினாலே அவ்விரிஷிபத்னிகளின் கருப்பத்திற் பிறந்தவர்களே உருத்திர கணிகையர்கள்.

இவர்களுக்குத் திருக்கோவிலில் கீதம்பாடலும், நிருத்தம், புஷ்பாஞ்சலி, நீராஞ்சனம், திருப்பொற்சுண்ணம் முதலிய திருத்தொண்டுகள் செய்தலும், பன்றி குற்றல் என்னும் உற்சவகாலத்தில் அத்திருவிழாக்காலத்துக்குரிய திருவேடங்களைத் தரித்து நடத்தலும் விதிக்கப்பட்டன. இவர்கள் தாங்கள் சர்வலோகாதி பரமசிவனுடைய அடிமைகள் என்று இடைவிடாது நினைந்து மனம், வாக்கு, காயம் மூன்றையும் சிவத் தொண்டுகளுக்கு உரிமையாக்கித் தங்களைக் காண்போர் "இவர்கள் எம்பெருமானாகிய சிவனுக்கு அடிமை பூண்டவர்கள்" என்று தெளிந்து பக்திபண்ணுதற்கு ஏதுவாயிருக்கும்படி சிவபெருமானே தங்கள் தலைவரெனக் குறிக்கும் திருப்பொட்டணிந்து மரணாந்தம் விவாகமின்றி யிருத்தலுமுண்டு. விவாகமின்றி, சிவனடியார்களுக்கு ஓரோர்காலத்தில் கர்மாநுசாரமாய் நிகழும் விஷய விச்சையைத் தணித்தற்பொருட்டு அவர்களுக்குபயோகமாய் வாழ்ந்து, சிற்றின்பசாகரத்தில் மூழ்காது ஈஸ்வரனுக்குரிய திருத்தொண்டுகளை வழுவாது நடத்திவருதலுமுண்டு.

இவ்வாறு நாம் ஆதிகாலத்தில் ஏற்பட்டதை நூல்களினின்றும் அறிகிறோம். இவர்கள் சிவனுக்கு அடிமை பூண்டவர்களானதினாலேயே ஒவ்வொருவரும் தேவ அடியாள் என்னும் காரணப்பெயரை யடைந்தார்கள். அந்தோ ! இத்தகைய அருமைத் தேவ அடியாள் என்னும் பெயருக்கு விரோதமாகத் தற்காலத்திலுள்ள உருத்திர கணிகையர்கள் பாவ அடியாராய் விளங்கும் பரிதாபம்தான் என்ன ? இவர்கள் பொருளையே சதமென்றெண்ணி அதைத் தேடுவதிலேயே தம் வாணாளை வீணாளாக்கி அடாத செய்கைகளைச் செய்து பொருள் தேடுகிறார்களேயன்றி, பாவம் புண்ணியம் என்பதைச் சிறிதும் கவனிக்கிறார்களில்லை. அந்தோ ! இது எத்தகைய அறிவீனம். "காதற்ற ஊசியும் வாராதுகாணுங் கடைவழிக்கே" என்பதையிவர்கள் சிறிது சிந்திப்பார்களாயின் நரகமே கதியென ஏற்படும்படியான பாவ அடியாராய் விளங்குவார்களோ ? இல்லை யில்லை. ஒருகாலும் அவ்விழிதொழிலுக் குடன்படார்களென்பது திண்ணம். முன்காலத்தில் உருத்திர கணிகையர் குலத்திலுதித்த பரவைநாச்சியார் முதலிய உத்தமிகள் பிறிதொன்றையும் பற்றாது சிவத்தியானம், சிவத்தோத்திரம், சிவத்தொண்டு முதலியவற்றை வழுவாதியற்றிய புண்ணிய விசேடத்தாலன்றோ இன்றும் புகழ்ந்து போற்றத்தக்க உத்தம நிலைமையை யடைந்தனர். ஆகா ! இத்தகைய உத்தமிகளின் கோத்திரத்திலுதித்தும் "குலத்தைக் கெடுக்கவந்த கோடரிக் காம்புபோல" தற்காலத்துக் கணிகையர்கள் செய்யும் அட்டூழியங்களை நினைக்கினும் நெஞ்சம் திடுக்கிடுகிறது.

மெய்வீசு நாற்றமெல்லா மிக்கமஞ்ச ளான்மறைத்துப்
பொய்வீசும் வாயார் புலையொழிவதெந் நாளோ.

என்று தாயுமானவர் இழித்துரைத்ததற்கு இவர்கள் செயல் முதலியன வன்றோ எது? ஒரு நாயகனால் திருமாங்கல்யம் கட்டப்பட்ட ஒரு நாயகி, அவனிடத்தில் எவ்வகைத் தொடர்புடையாளாகின்றாளோ? அவ்வகைத் தொடர்பை, உருத்திர கணிகையர்கள் ஈசுவரனிடத்தில் கொண்டவர்க ளாகின்றனர். ஆகவே, இவள் சிவ கைங்கரியத்திற் குரியாளென்பதையே அத்திருப்பொட்டு விளக்கி நிற்கின்றது. அது இல்லாமல் பிறிதொரு விஷயத்தில் பெருநிதி சம்பாதிக்கலாமென்பதைக் குறித்து நிற்கவில்லை.

இவ்விஷயத்தை உருத்திர கணிகையர்களான எம் சகோதரிகள் கவனித்து அதன்படி நடப்பதே சிறப்பாகும்.

இது நிற்க. கோவில்களில் சிறிதுகூட பாத்தியமில்லாதோரும் வேறு தாழ்ந்த வருணத்தாரும் தங்கள் பெண்களை விவாகம் செய்துகொடுக்க விதியின்றி வெகு எளிதில் பொட்டுக் கட்டிவிடுகிறார்கள். அந்தோ! இது பரிதாபத்திலும் மிக்க பரிதாபமேயாம். போகட்டும், அப்படியாவது அப் பெண்களை சிவத்தொண்டர்களாக்கி நற்கதியடையும்படியான நன்மார்க் கங்களைக் காண்பிக்கிறார்களோ? அதுவுமில்லை. வேறு என்ன செய்கிறார் கள்? பாழும் பணத்திற்காகத் தமது குமாரத்திகளின் அருமைக் கற்பைப் பர புருஷர்களுக்கு விற்று மானமழிந்து பலரும் இகழ்ச்சிபுரியுமாறு கேவலத் தொழிலைச் செய்விக்கிறார்கள். இவர்களின் அறிவீனத்தை எவ்வாறு நாம் எடுத்துரைக்கவல்லோம்.

இத்தகைய அநீதியான காரியங்களினாலேயே நம் தேயமெங்கும் பாவ அடியாள்கள் நிறைந்து விளங்குகிறார்கள்.

உருத்திர கணிகையர்களான சகோதரிகளே! உங்களுக்கு ஆதிகாலத்தில் ஏற்பட்டதையும், நன்மார்க்க விஷயங்களையும் நாம் எடுத்துரைப்பதற்கு நம்மிடம் போதுமான அறிவில்லை. அறிவிற் சிறந்தவரான கமலாம்பிகையார் புத்திரி க. அஞ்சுகம் அம்மையாரால் இயற்றப்பட்ட "உருத்திர கணிகையர் கதாசாரத்திரட்டு" என்னும் நூலை வாசித்தால் உண்மை விளங்கும். ஆதிகாலத்தில் ஏற்பட்டபடி யொழுகவேண்டுமென்பதே எமது முக்கிய நோக்கமாகும். வீணில் பொருளின்மேல் இச்சையுற்றுப் பெண்களுக்கே முக்கிய ஆபரணமாகிய கற்பை யிழக்கத் துணிவதை நோக்கின் அவர்களிடம் அறியாமை நிறைந்திருக்கிறதென்பதைக் கூறவும்வேண்டுமோ! சகோதரிகளே! அவ்வறியாமையினின்றும் விலகுவதற்குக் கூடிய வரையில் பிரயாசை யெடுங்கள். ஆதிகாலத்துக் கணிகையர்களின் நன் மார்க்கத்தைப் பின்பற்றுங்கள். எப்பொழுது நீங்கள் திருப்பொட்டு அணி யப் பெற்றீர்களோ அப்பொழுதே சிவபிரானுக்கு அடிமையென்பதை ஞாபகத்தில் வைத்து எம்பெருமானுக்குத் தொண்டுசெய்யுங்கள். சிவபக்தி, சிவனடியார் பக்தி, சிவசின்ன பக்தி, மகேஸ்வர பூசை, தானம், தருமம் முதலியவற்றை விதிப்படி செய்து சிவானந்தப் பேறுபெற்றுத் திருவருட்

செல்வியராய் விளங்குங்கள். மேலும் மேலும் நாம் கூறப்புகுவது விரிவிற்கிடமேயாதலால் அதற்கு நமது போதினி இடந்தராதென்பதைக் குறித்து அஞ்சி இத்துடன் நிறுத்துகிறோம். முடிவாக எல்லாம்வல்ல இறைவன் உருத்திர கணிகையர்களான சகோதரிகளுக்கு நற்புத்தியையும் நன்மார்க்கத்தையும் அளிக்குமாறு எம்மனதார இறைஞ்சி வேண்டுகிறேன்.

தி. சீ. குழந்தைவேலன்.

---

## இந்தியாதேசம் பஞ்சத்தால் வருந்துவதேன்?

உலகிலுள்ள மற்றெல்லாத் தேசங்களைவிட நம் இந்தியா தேசமானது நீர்வளம், நிலவளம் முதலியவற்றில் மேன்மையுற்றதாயும், நவதானியங்கள் விளையக்கூடியதாயும் இருந்தது. அந்த நவதானியத்தையும் அன்னிய நாடுகளுக்குக் கொடுத்து உயிர்ப்பிச்சை யளிக்கக்கூடிய, நம் தேசமானது இப்போது கொடியபஞ்சத்தால் பீடிக்கப்பட்டு வருந்துவதை ஆராய்ந்து வரைவோமாக.

1. முன்காலத்தில் நம்தேசத்தில் உள்ள விவசாயிகள், தங்கள் பூமிகளில் உணவுப் பொருளாகிய, நெல், கம்பு, சோளம், கேழ்வரகு, சாமை, கோதுமை முதலியவற்றைப் பயிரிட்டு, ஏராளமான தானியத்தைச்சேர்த்து வைத்தார்கள். மாடுகளுக்கும் தீனிகள் ஏராளமாய்ச் சேகரித்து வைத்திருந்தார்கள். மழையில்லாத காலத்தும், தம்மிடம் மீதியாயுள்ள தானியத்தை வைத்துக்கொண்டு ஜீவித்து வந்தார்கள்.

தற்காலத்திலோ, தானியத்தைப் பயிரிடுவதை விட்டு, கைநிறைய கரன்சி நோட்டுகளாய் வாங்கலாமென்ற பேராசைகொண்டு, கம்போடியா அமெரிக்கன் பருத்தியையும், மணிலாக் கொட்டையான நிலக்கடலையையும் பயிரிட்டு வருவதால், மனிதர்களுக்கு, உணவுப் பொருளும், மாடுகளுக்குத் தீனியும், கிடைக்காமல் சாப்பாட்டுக்கு வருந்தக்கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. முற்காலத்தில், புன்செய் நிலங்களில் நாடன் என்னும் பருத்தியை, நம்தேசத்துக்கு வேண்டிய அளவு சாகுபடிசெய்துவந்தார்கள். தற்பொழுது, நெல்விளையக் கூடிய நடநீர் நன்செய்களிலும், தோட்டங்களிலும், புன்செய்களிலும். 4-ல் $3\frac{1}{2}$ பாகம் பருத்தி, மணிலாக்கொட்டை சாகுபடி செய்கிறார்கள். உணவுக்கு வேண்டிய தானியாதிகளைப் பயிர் செய்யாது விடுத்ததால் நம்தேசமானது கொடிய பஞ்சத்தை அடைய வேண்டியதாயிற்று.

2. முற்காலத்தில் நம்தேசத்தில் விளையக்கூடிய தானியம் பருத்தி வேர்க்கடலை மற்றுமுள்ளசாமான்கள். அவைகளை நம்தேயத்துக்கு வேண்டிய அளவு வைத்துக்கொண்டு மீதியுள்ளதை அன்னிய நாடுகளுக்கு ஏற்றுமதிசெய்துவந்தார்கள். தற்பொழுது, வியாபாரிகள் நம்தேச சாமான்களை, பொருள்சம்பாதிக்க லாபத்தை உத்தேசித்து, அன்னியநாட்டுக்கு வாங்கி அனுப்பிவிடுகிறார்கள். அதனால் நம் நாட்டில், உணவுப்பொருள் வேண்டிய அளவு இல்லாமற்போகின்றது. மீதியாயுள்ளதை விலையேற்றிவிற்பதால், அநேகர் வாங்கப் பணம் இல்லாது, கஷ்டத்தை அடைகிறார்கள்.

3. பூர்வீகத்தில் நம் நாட்டிற்குவேண்டிய துணி, இதர சாமான் முதலியவற்றை நம் நாட்டுக் கைத்தொழிலாளரால் செய்துவந்ததால், அனேகருக்கு ஏராளமாய்க் கூலிவேலைகள் கிடைக்க அவர்கள் ஜீவனம்செய்து வந்தார்கள். தற்பொழுது அன்னியநாட்டுக் கைத்தொழிலாளர் செய்த சாமானை வாங்கிவருவதால், நம்நாட்டுச் சாமான் வாங்குவாரற்றுப்போய் கைத்தொழில் ஜீவனமும் இல்லாமற் போய்விட்டது. மூவாயிரம் பேர் கைராட்டினத்தால் நூற்கும் நூலை லங்காஷயர் மான்சஸ்டர் போன்ற ஒரு மில்லானது நூற்று, 3090 பேர் கூலிவேலையைக் கெடுத்து விடுகிறது. நானூறுபேர் கைத்தறியால் நெய்யக்கூடிய நெசவுவேலையை ஒரு மில்லானது நெய்து 500 பேர் கூலியைச் சாப்பிட்டு விடுகிறது. இதனுலும் மற்ற தொழிலாலும் பிழைக்கக்கூடிய கூலிஜனங்கள் யந்திரங்களால் கூலிவேலையின்றிச் சாப்பாட்டுக்குத் திண்டாடவேண்டி யிருக்கிறது.

4. நம்தேசத்து ஜனப்பிரதிநிதிகள் நம்மை ஆட்சிசெய்யும் அரசாங்கத்தாரை ஒரு ஏக்கருக்கு இவ்வளவுதான் பருத்தி, வேர்க்கடலை சாகுபடி செய்யவேண்டு மென்றும், சாமான்களும் உணவுப்பொருளும் இவ்வளவுதான் அன்னிய நாட்டுக்கு ஏற்றுமதி செய்யவேண்டு மென்றும், நம்மவர்கள் நம்மவரது கைத்தொழிலால் செய்யப்பட்ட சாமானையே முக்கியமாய் வாங்கவேண்டு மென்றும் ஒருசட்டம் இயற்றி நடத்த ஏற்பாடுசெய்தால் நம்தேய வறுமை ஒழிந்து கைத்தொழிலும் நாமும் விருத்தி அடையலாம்.

5. அப்படி அரசாங்கத்தார் ஏற்படுத்த ஒப்பமாட்டார்கள். ஒப்பினுல் மேல் நாட்டாருடைய கைத்தொழிலுக்கும் வியாபாரிகளுக்கும், யந்திரங்களுக்கும் பிழைக்க வழியற்று நமதுகதியை அவர்களும் அடையநேரிடும்.

ஆகையால் ஜனப்பிரதிநிதிகளா யுள்ளவர்கள் மேற்சொல்லியபடி ஏற்பாடு செய்ய முயலுவார்களாகில் நலமே. முக்கியமாய் பருத்திசாகுபடி குறைந்தால் உணவுப்பொருள்களும் தீனியும் ஏராளமாய்க்கிடைக்கும்; ஏற்றுமதி குறைந்தால் நம்தேயத்தில் சாமான் விலை சரசமாயும், ஏராளமாயும் கிடைக்கும். நம் நாட்டுக் கைத்தொழில் சாமான்களையே வாங்கவேண்டு மென்று விதி ஏற்பட்டால் கைத்தொழிலால் ஏராளமான கூலியும், கைத்தொழிலும் விருத்தி அடையும். மற்றும் இவைபோன்ற அநேக நன்மைகளை அடையலாம். ஜனப்பிரதிநிதிகள் கவனிக்காவிடில் நம்மைப் பாதுகாத்து ரக்ஷிக்கக்கூடிய எல்லாம்வல்ல பரமகருணாநிதியை நம்தேச வறுமைப் பிணியை ஒழித்து மேன்மை அடையச் செய்யுமாறு பிரார்த்திக்கின்றோம்.

V. M. துப்புசாமி துருக்கள்,
சர்க்கார் வாழவந்தி, சேலம் ஜில்லா.

---

## சுருட்டு சிகரெட்.

திருவளரன்பர்காள் !

அலைகடல் சூழுமித் தென்னாட்டில் மேருபருவதத்தி னுச்சியிலிட்ட தீபவெள்ளியைப்போல் பிரகாசித்துத் துலங்கும் நமது ஆனந்தபோதினி ஒவ்

வொரு மித்திரர்களி னில்லம் புகுந்து மாணவர்கள் சுருட்டுப்புகை பிடிப்பதனு லுண்டாகும் பெருங்கேடுகளைப் பன்முறை உபதேசித்திருப்பது அன்பர் யாவரும் அறிந்ததே.

யான் " சேரிடமறிந்துசேர் " என்னும் நம்மூதாட்டியாரின் இதோபதேசத்தைப் புத்தகவாயிலாகக் கற்றும் அதனை வழுவவிட்டுப் பண்பிலாருறவுகொண்டு பின்வரக்கூடிய கஷ்ட நஷ்டங்கள், பாவங்கள், பரிவுகள், இழிவுகள், இவையாவையும் நன்கறியாது எனக்குப் பதினைந்து பிராயமானதும் பீடி சிகரெட்டுகளை நாளொன்றுக்கு ஐந்தாறு வீதங்களாக உபயோகித்து அதனுல் வரும் நன்மையையும் குணத்தையும், மனமார அனுபவித்தேன். இதுமட்டுமா.

அவைகளுடனுறவாடி விளையாடுந் தறுவாயில் என் தேகநிறை இருபத்தோ ரிராத்தலாக இருந்தது. அப்பாலெனக்கு இருபது பிராயமான போது அவைகளின் உறவால் என் நிறை 23 இராத்தலா யிருந்தது. நிற்க,

மேலானதென்று கருதிய பீடி சிகரெட்டுகளின் குணுதிசயங்களை யான் பட்டகுறையி லிருந்தும் போதினியிட முபதேசங் கற்றறி லிருந்தும் முழுமையும் உரைக்க அவாக்கொண்டு முன்வந்துள்ளேன். அவை:—

1. தேகபலக்குறைவு.
2. நாவறட்சி.
3. ஆத்மசக்தி குறைவு.
4. உட்கார்ந் தெழுந்ததும் கண்கள் இருட்டிப் பஞ்சடைதல்.
5. ஒரு பர்லாங்கல்லது இருபர்லாங்குகள் நடந்திடின் மேல்மூச்சு கீழ்மூச்சுக ளுண்டாதல்.
6. புகை உட்கொண்ட ஒரு நாழிகைக்குள் ஆகாரம் ஜீரணமாகி மறுபடி பசி யெழும்புதல். இவ்வாறு பசிவந்ததும் தொழிலிலலைந்துகொண்டிருத்தலால் சாப்பிட ஹேதுவில்லாமற் போய்விடுகிறது. அதனுல் வயிற்றிலோர்வித இரைச்சலும் பிசைவும் உண்டாகி இயந்திரங்க ளொன்றோடொன்று உராய்ந்து பசியின் வெப்பத்தால் மந்தித்து விடுகிறது.
7. அன்னமாவது சித்திரான்னங்களாவது உருசிதெரியாமற்போதல்.
8. கீழுதடு மேலுதடு இவைகள் கருத்து விடுகின்றன.
9. நெஞ்சு பறையடிக்கின்றது.
10. நினைவு மாறுகின்றது.

அதாவது மறுதினம் ஆயுளுட னிருந்திடில் அன்றுமுடிவு பெறவேண்டிய கைங்கர்யத்தை யோசனை செய்துகொண்டு நித்திரைசெய் தெழுந்ததும் உதையத்தில் விழித்து நானினைத்த நினைவுகளும் முடிவுபெறவேண்டிய காரியங்களும் ஞாபகத்திற் கெட்டாமல் மறைந்து விடுவதுடன் சில புஸ்தகங்களை மனதிற் பதியுமாறு வாசித்துணரக் கருதி வாசித்து முடித்த பின் படித்த அளவேதான் ஞாபக மிருக்கிறது. அப்பால் மனதிற் பதியாமல் மனத்தை விட்டகன்று விடுகிறது. மேலும் சுடுநீரில் ஸ்நானம் செய்

யும் பொழுது, தலையில் இரண்டு செம்பு தண்ணீர் விழும்வரையில்தான் எனக்கு என் உணர்வு இருக்கின்றது. அதற்கப்பாலென்ன நடந்ததென் கிற உணர்வில்லாது ஸ்மரணையற்றுக் கீழ்விழுந்து நாடிகெட்டு, மண்டையி லும் சில பல தடவைகளில் காயம் அடைந்திருக்கிறேன். அதைப்பற்றி வைத்தியர்களிடம் கேட்டதில் பீடி சிகரெட்களின் புகைகளிலிருந்து பித்த மேலோங்கி, சிரசில் குடிகொண்டு விடுதலால் அவ்விதம் ஸ்மரணையற்றுப் போகிறதென விளம்பினார்கள். அந்தோ! என்னபரிதாபம், என்ன பரி தாபம்!

11. பீடி சிகரெட்களில் ஒருவித லாகிரியிருப்பதாக என் அனுப வார்த்தமாய் அங்கை நெல்லிக்கனிபோல் தெரிந்துகொண்டேன். மேல் கண்டுள்ள லாகிரியின் துற்செய்கைக்கும் பஞ்சமாபாதகத்திற்கும் சித்திக் கும் குன்றிய வாழ்நாட்களே பீடி, சிகரெட், கள்குடி இவற்றிற்கு உண் டென்றஞ்சிச் சோகமுமடையலானேன்.

12. பிறரால் அவமதிப்பும் பேரிழிவு மேற்படும்.

அன்பார்ந்த சகோதரர்காள்!

பீடி சிகரெட்டுகளின் வெறியால் நேரக்கூடிய கீழானதும் பாவமா னதுமான நிலையிலிருந்து உய்யும்பொருட்டு இவ்வாண்டு முதல் என்பால் கருணைகொண்டு பிறர் நலங்கருதும் நமதானந்தபோதினி வந்தணுகி என க்கு நல்ல நண்பனும் குரவனுமா யிருந்து அரிய பெரிய இதோபதேசங்க ளைச் சுதந்தரத்துடன் கற்பித்தது. நானுமென் மனத்திடத்தே அவற்றை யூன்றிவைக்க, விழுமியோ ரொப்பாத என் பாவகரமான செய்கை என்னை விட்டகலச்செய்தது. பின்ன ரிருமாதங்களாக யான் சுகஜீவியா யிருந்து வருகிறேன். இப்பொழுது சுடுதண்ணீரால் பயமுமில்லை.

நேயர்களே!

"நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம்
என்று மிடும்பை தரும்"

என்னும் அரியநீதியை ஆதாரமாகக்கொண்டு பீடிசிகரெட்டுகளை அடியோடு வெறுத்தும் நமதாயுள் சதமல்லவாதலின் உள்ளபோதே தீமையான காரி யங்களைச் செய்யாமல் சன்மார்க்கத்தி லீடுபட்டு, புண்ணியம் பெறுமாறு, எல்லாம் வல்ல சிவபெருமானளித்த முருகப்பிரானருள்புரிய அவன் திரு வடிகளை இறைஞ்சுவோமாக.

திருமந்திரக்ஷேத்திரம்,
பா. இசக்கியப்பன், தொண்டன்.

---

## விடு.

மரமது மரத்தி லேறி மரமதைத் தோளில் வைத்து
மரமது மரத்தைக் கண்டு மரத்தினன் மரத்தைக் குத்தி
மரமது வழியே சென்று வளமனைக் கேகும்போது
மரமது கண்ட மாதர் மரமுடன் மரமெடுத்தார்.

இச்செய்யுளுக்கு நமது ஆனந்தபோதினி மூலமாகப் பொருள் நுட்ப மறியும் புத்திமான்கள் பொருள் தெரிவிக்குமாறு நமது "ஆனந்தபோதினி" யின் 8401-வது நெ. சந்தாதாரராகிய யான் கேட்டுக்கொள்கிறேன்.

M. G. சுப்பைய செட்டியார்,
திருவாரூர்.

## பகவத்கீதை வசனம்.

(435-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஹே அர்ச்சுன ! பிரதியுபகாரத்தின் பொருட்டாகிலும், சுவர்க்காதி பயனை யுத்தேசித்தாகிலும், பச்சாத்தாபத்தோடு கூடியாகிலும் கொடுக்குந் தானம் இராஜததானமாம்.

ஹே கௌந்தேய ! எந்தத் தானமானது பிரதியுபகாரத்தை யுத்தேசித்துக் கொடுக்கப்படுமோ, அதாவது இந்தப் பிராஹ்மணனுக்கு யான் தானம் கொடுப்பேனாயின், ஒரு சமயத்தில் எனக்கு அவன்பதில் உபகாரஞ்செய்வான் என்னும் புத்தியினாலே கேவலம் கண்கண்ட பயன் சித்தித் தற்பொருட்டே எத்தானமானது கொடுக்கப்படுமோ, அல்லது, இத்தானத்தாலே எனக்குச் சுவர்க்கம் உண்டாகுக வென்னும் உத்தேசத்துடன் எத்தானங் கொடுக்கப்படுமோ, இவ்வளவு தனத்தையான் ஏன்செலவழித்தேன் எனப்பச்சாத்தாபத்துடனே எத்தானங் கொடுக்கப்படுமோ, அந்த தானத்தைப் பெரியோர் இராஜததான மென்பர். சாத்விகதானத்தினும் இராஜததானத்திலுள்ள வேற்றுமையை யூகித்தறிந்து கொள்க.

ஹே அர்ச்சுன ! எத்தானம், அதேசத்தில் அகாலத்தில் அபாத்திரர் பொருட்டுச் சற்காரமில்லாமல் அவமதிப்போடும் கொடுக்கப்படுமோ அத்தானம் ஆன்றோரால் தாமததான மெனப்படும்.

ஹே பார்த்த ! இயல்பாகவேனும், துஷ்டர்களின் சம்பந்தத்தாலேனும் பாவகாரணவடிவ அசுத்தமான இடம் அதேசமாம். புண்ணியத்தின் காரணமாகப் பிரசித்தமில்லாத காலம், அகாலமாம்; அல்லது சௌசமற்ற காலம் அகாலமாம். அத்தகைய தேசகாலத்தில் வித்தை தவமில்லாத நடவிடாதி அபாத்திரர் பொருட்டுப் பொன்முதலிய கொடுக்கு மத்தானம் தாமதமெனப்பெறும். உத்தம தேசகால பாத்திரங் கிடைப்பினும் சற்காரமில்லாமற் செய்யுந்தானம் = பிரியவசனம், பாதப்பிரக்ஷாளனம், சந்தனம் புஷ்பம் அக்ஷதை முதலியவற்றாலே பூசை என்பதாதி சற்காரத்தாலே யன்றிச செய்புந்தானம், அவமதிப்போடு கொடுக்குந்தானம் அதாவது தானபாத்திரரூப மறையவரை ஆதரவுசெய்யாது கொடுக்குந்தானம் ஆகிய இதனை (பெரியோர்) தாமதமென்பர்.

[ஆண்டு, முற்பிரசங்கத்தில், ஆகாரம், யாகம், தவம், தானம் என்னும் நான்கினுக்கும் சாத்விகாதி மூவகைப் பேதததைக் கூறியருளி அச்சாதவிகாதி ஆகாராதிகள் இன்றியமையாமல் கொள்ளத் தக்கன வெனவும், அவ்விராஜதாதி ஆகாராதிகள் விள்ளத்தக்கன வெனவும் திருவாய் மலர்ந்தருளப்பெற்றன. அவற்றுள் ஆகாரமோ கேவலம் பசிநீக்கவடிவ கண்கண்ட அருத்த சித்தியையே யாக்குமல்லாமல், அறத்தை யாக்கும் வாயிலாய்த் துறக்காதிரூப அதிர்ஷ்ட அருத்த சித்தியை யாக்காதாமாதலின் ஏதேனும் அங்கமிலதேனும் ஆகாரபல அபாவசங்கையாகாதாம். தருமஉற்பத்தி வாயி

லாக மனத்தூய்மை வடிவ அல்லது சுவர்க்காதிவடிவ அதிர்ஷ்ட அருத்த அடைவுசெய்யும் யாகம் தவம் தானம் என்னும் மூன்றற்குமோ யாதேனு மொருமந்திராதிரூப அங்கமிலாமையானே தரும அபூர்வ முண்டாகாமற் பலமிலாமையேயாம். இதனானே சாத்விகயாகாதிகளில் பலமில்லாமையே யாம்;ஏனெனின், யாகாதியைச் செய்பவர்க்குப் பிரமாதத்தின் மிகுதியாலே யாதேனுமொரு அங்கங்கெடுதலே யாமாதலின், அக்கெடுதலை நீக்கும்பொ ருட்டு ஓம் தத்சத்தென்னும் ஸ்ரீ பகவந்நாம உச்சாரணரூப சாமான்ய பிராயச்சித்தத்தைப் பரமதயா நிதியாகிய ஸ்ரீ பகவான் அதிகாரிகட்கு உப தேசித்தருளல்.]

ஹே அர்ச்சுன ! ஓம் தத் சத்தென மூன்றவயவப் பரப்பிரஹ்மத்தின் நாமம் ஸ்மரிக்கப் பெற்றுளது. அந்நாமத்தாலே சிருஷ்டியின் ஆரம்பகா லத்தில் பிரஜாபதியானவர், பிராஹ்மணாதி கர்த்தாவையும், காரணரூப வேதத்தையும், கர்மரூப யாகத்தையும் உண்டாக்கினர்.

ஹே பார்த்த ! அகார உகார மகார மென்னும் மூன்று அவயவங்க ளோடு கூடிய ஒரேபிரணவ நாமம் பரப்பிரஹ்மத்திற் காவதேபோல ஓம் தத்சத்தென்னும் மூன்றவயவமுடைய ஓம் தத்சத்தென்னும் ஒரேநாமம் பரப்பிரஹ்மத்திற்கு வேதாந்த மறிந்தவர்கள் விளம்புவார்கள். முற்காலத் தில் வேதாந்தமறிந்த பெரிய இருஷிகள் கூறிய பிரகாரம் ஸ்மரித்ததாலே இப்போதிருக்கும் ஞானிகளும் அங்ஙனமே அவசியம் ஸ்மரிக்கவேண்டும். அந்த நாமத்தைஸ்மரித்தலாலே அதிகாரிகள் இயற்றும் யாகாதிகள் இடை யூறுடையனவாகாவாம் என்பது. ஸ்மிருதியிலும் காணலாம். யாகாதியைச் செய்பவனுக்கு யாதேனும் ஒரு பிரமாதவயத்தால் அவற்றுள் மந்திராதிரூப அங்கம் பங்கப்படின் அது ஸ்ரீ மகாவிஷ்ணுவின் ஸ்மரணத்தாலே பரி பூர்ணமாம் எனச் சுருதிபகவதிகூறியுள்ளாள். வேதவேத்தாக்களாகிய ஆன் றோர் எவ்வெவ் வைதிககருமத்தைத் தொடங்குகின்றார்களோ அவ்வதன் றொடக்கத்தில் ஓம் தத்சத்தென்னும் நாமத்தை ஸ்மரித்தே அவ்வதனைச் செய்வார். ஆகையினால் சிஷ்டாசார ரூபப்பிரமாணத்தாலும் இடையூறு நீங்கும் பிரயோஜனம் அதற்குத் துணியப்படும். மேற் கூறிய நாமஸ்மர ணத்தினால் யாகாதிகளின் விக்கினம் நீங்குவதாகும் என்பதான அதன் சாமர்த்தியத்தைத் தெரிவித்தருளுதற்கு ஸ்ரீ பகவான் அந்நாமத்தைத் தோத்தரித்தும் அருளினார்:—சிருஷ்டியின் ஆதிகாலத்தில் பிரஜாபதியா கிய பிரஹ்மாவானவர் பிராஹ்மண க்ஷத்திரிய வைசிய கருமகருத்தாக்களை யும், காரணரூப வேதத்தையும், கருமரூப யாகத்தையும், உண்டாக்கியது ஓம் தத்சதென்னும் பிரஹ்ம நாமத்தைத் தியானித்தேயாம். ஆகலின் யாகாதி சிருஷ்டியின் காரணமாதலின் இம்மகாமகிமை வாய்ந்த பிரஹ்மத் தின் நாமம் இடையூறு நீக்குவதில் ஆற்றலுற்றதேயாம்.

[இப்போது ஸ்ரீபகவான், அகாராதிமூன்று அவயவங்களை வியாக்கியா னித்து அவற்றின் சமுதாயரூப ஓங்காரத்தின்வியாக்கியானமாவதேபோல

ஓம் தத்சத்தென்னும் மூன்று அவயவங்களின் வியாக்கியானஞ் செய்தருளி அவற்றின் சமுதாயரூப ஓம் தத்சத்தென்னும் பிரஹ்மநாமத்தை நான்கு சுலோகங்களாலே வியாக்கியானித் தருளுகின்றார். அந்தப் பிரஹ்மநாம ஸ்துதியின் அதிசயத் தன்மையின் பொருட்டு ஆண்டு முதலில் ஓங்கார சப்தவியாக்கியானம் செய்தருளல்.]

ஹே அர்ச்சுன! அக்காரணத்தினாலே ஓம் என்னும் சப்தத்தை யுச்சரித்தே வேதவேத்தாக்களின் விதிசாஸ்திரம் விளம்பிய யாக தான தவ வடிவக் கிரியை நிரந்தரம் பிரவிருத்திக்கும்.

ஹே பற்குன! சுருதிகளில் ஓமென்னும் சப்தம் பிரஹ்ம நாமமென வெளிப்படையாதலின் ஓமென்பதை யுச்சரித்தே வேதவேத்தாக்களின் விதி சாஸ்திரம் விளம்பிய யாக தான தவ வடிவ எல்லாக் கிரியையும் எப்போதும் பிரவிருத்திக்கும்; அதாவது வேதவேத்தாக்கள் எவ்வெச்சாஸ்திர விகித யாக தவ தானக்கிரியைச் செய்வரோ அவ்வக்கிரியையின் முன் ஓமென உச்சரித்தே பின் அவ்வத்தொழிலைச் செய்வர் என்பதாம். அவ்வோங்கார உச்சாரண மகிமையாலே அந்த மகான்களின் யாகாதி நற்றொழில்கள் விக்கினமில்லாமல் நன்கு முடியும். ஆகையால், அம்மூன்றனுள் ஒன்றாய ஓங்காரத்தை யோதினும் எல்லா இடையூறுகளும் நீங்கும் என்றால் அம்மூன்றையும் சேர்த்து உச்சரித்தால் விக்கினம் பக்கினமாமென்பதில் மீண்டுங் கூறத்தக்கது யாதுளது.

[மூன் சுலோகத்தில் காமிய யாகாதி கருமங்களினும் நிட்காம யாகாதி கருமங்களினும் சாதாரணத் தன்மை ரூபத்தாலே ஓமென்பதற்கு உபயோகம் அருளப்பெற்றது; இப்போது முமுக்ஷுக்கள் யோகத்தைக் கூறி யருளுபவராகிய ஸ்ரீ பகவான் அதற்கு வியாக்கியானம் செய்தருளல்.]

ஹே அர்ச்சுன! மோக்ஷ இச்சையையுடைய புருடர் தத்தென்னும் சப்தத்தை யுச்சரித்துப் பயனை இச்சியாது நானாவகையாய யாக தவ தான ரூபக்கிரியைகளைச் செய்கின்றனர்.

ஹே பாண்டவ! தத்வமசி யென்பதாதி சுருதிகளில் வெளியாயுள்ள தத் என்னும் பிரஹ்மநாமத்தை யுச்சரித்தே பயனை விரும்பாமல் முமுக்ஷுக்கள் தமது சித்தசுத்தியின் பொருட்டு பலவகையாய யாகாதி கிரியையைச் செய்வர்; தத்சப்த உச்சாரணமகிமையாலே அவர் தமக்கு யாகாதிகள் யாவும் இடையூறின்றி முடியுமாதலின் இந்தத் தத்சப்தமும் மிக மேன்மையதா மென்றறிந்துகொள்.

[இப்போது ஸ்ரீ பகவான் மூன்றாவது 'சத்சப்தத்தை இருசுலோகங்களால் வியாக்கியானித்தருளுகின்றார்.]

ஹே பார்த்த! சத்பாவத்திலும் சாது பாவத்திலும் பெரியோர் சத்தென்னும் சப்தத்தை உச்சரிக்கின்றனர்; புகழ்ப்பெற்ற கருமத்தின்கண்ணும் சத் சப்தத்தை யுச்சரிக்கின்றனர்.

ஹே அர்ச்சுன! சத்தே சௌமிய இத்தனைக்கு முதலில் என்பதாதி மறைகளில் வெளியாய சத்தென்னும் பிரஹ்மத்தின் நாமத்தை நூலுணர் பெரியோர் சற்பாவத்தின்கண் ணுச்சரிக்கின்றனர்; அதாவது எப்பொருட்டு இருப்பின்மைச் சங்கையுண்டாமோ அதற்கு இருப்பு இருப்பதில் சத் சப்தத்தை யுச்சரிக்கின்றனர். சாதுபாவத்திலும் சத்சப்தத்தை யுச்சரிப்பர்; அதாவது, எதற்கு அசாதுத்தன்மை சங்கையுண்டாகுமோ அதன் சாதுத் தன்மையிலும் அதனை யுச்சரிக்கின்றனர். ஆகலின் இந்தச் சத்சப்தம், இடையூற்றை நீக்கி யாகாதிகளைச் சாதுத்துவ மாக்குவதற்கும், அவற்றின் பயனை யிருத்தற்கும் ஆற்றலுடையதாம். சற்பாவத்திலும், சாதுபாவத்திலும் இச்சத்சப்தம் உச்சரிக்கப்படுவதே போலத் தடையில்லாமல் விரைவாகவே இன்பத்தை யுண்டாக்குவதாகிய விவாகாதி மங்கள காரியத்தும் பெரியோர் சத் சப்தத்தை யுச்சரிப்பராதலின், இச் சத்சப்தம் இடையூற்றை நீக்கி மகமுதலியவற்றிற் றடையில்லாமல் விரைவாகவே பலத்தை யுண்டாக்குந் தன்மையைச் சம்பாதிப்பதில் ஆற்றலுடையதா மாதலின் இச சத்சப்தம் மிகவும் மேன்மையுடையதாம்.

(தொடரும்.) சீடன்.

---

## அம்பாலிகை அல்லது அதிசய மரணம்

(438-ம் பக்கத் தொடர்ச்சி.)

இதைக் கேட்டபோது மட்டும் லாயர்முகம் வெளுத்து விட்டது. "அப்புறம் கூறு" என்ருன்.

மா-அ:—"அச்சுதன் கொல்லப்பட்ட சங்கதி முழுதும் தெரியும்; அதில் நீ எவ்வளவுவரை சம்பந்தப்பட் டிருக்கிறு யென்பதும் தெரியும்" என்ருன்.

லாயர் கலவரமடைந்து நாகுழறிக்கொண்டே "அப்படியாளுல் நீயுன் மர்மத்தை வெளியிட்டு விடப்போகிருய்?" என்ருன்.

மா-அ:—என்ன மர்மம்?

லாயர்:—என் குமஸ்தா அச்சுதன் கொல்லப்பட்டா னென்று நீயே கூறுகிருய்; அப்படி யிருக்க நீயே அச்சுதன் என்று என் இரகசியங்களை வெளியிடா திருக்கப் பணம்வந்து கேட்கிருயே எப்படி?

மா-அ:—அது ஒரு இரகசியம், பிறகு வெளியாகும்.

லாயர் உள்ளத்தில் தன்னை அச்சுதன் என்று நம்பவில்லை யென்று ஆனந்தலிங்குக்கு நன்ருய்த்தெரியும். ஆகையால் இனி மர்மத்தை வெளியிட வேண்டிய காலம் நெருங்கிவிட்ட தென்றறிந்தே அவ்வாறு கூறினன்.

### 10-வது அத்தியாயம்.

புத்தி கூர்மையும், நிதானமும், சாமார்த்தியமு முடைய இரண்டு ஆசாமிகளும் சற்றுநேரம் ஒருவர் முகத்தை யொருவர் பார்த்துக்கொண்டு நின்ருர்கள்.

கடைசியில் லாயர் மாய அச்சுதனை நோக்கி "நீ அச்சுதனல்ல, மோசக்காரக் கள்ளப்பயல், நீயார் ?" என்றான்.

மா-அ:—நான் என் மர்மத்தை விட்டுவிட்டதாய் நீ கூறினையல்லவா? ஆகையால எல்லாம் வெளிவர வேண்டியதுதானே,

லாயர்:—சரி, அப்படி யானால் தற்காலம் அசசங்கதியை விட்டுவிடுவோம். உன்விலை யென்ன ?

மா-அ:—என்விலை சுலபமே. இலட்சுமணப்பிள்ளை யெழுதிய மெய்யான மரண சாசனத்தை யென்னிட மளித்து விடவேண்டும்.

லாயர்:—மிக்க அதிகமான விலை.

மா-அ:—அதுமட்டு மல்ல, அம்பாலிகையை யென்வசம் ஒப்பித்து விடவேண்டும்.

லாயர்:—நீ கேட்கிறபடி நான் நடப்பதாயின், நாங்கள் இவ்வளவு ஆபத்துகளுக்கும் துணிந்து அடைந்த இலாபத்தையெல்லாம் அடியோடல்லவோ இழந்துவிட வேண்டும்.

மா-அ:—கண்டிப்பாய் இழக்க வேண்டியதே.

லாயர்:—சரி, இதுகாறும் நான் உன் நிபந்தனைகளை யெல்லாம் கேட்டேன், சற்று நான் கூறும் நிபந்தனைகளைக்கேள்.

மா-அ:—நல்லது கூறு.

லாயர்:—நீ என்னை யேமாற்றிப் பயமுறுத்திப் பொருள் பறிப்பதாகிய குற்றச்சாட்டில் சிக்கிக்கொண் டிருக்கிறாய், நான் உன்னைச் சிறைச்சாலைக்கு அனுப்பக்கூடும்.

மா-அ:—தனக்குள் புன்னகை புரிந்துகொண்டதே "அய்யா ! தயவு செய்து என்மேல் கருணை காட்டும்" என்றான்.

லாயர்:—ஓ ஆவேசமே! நீயிதைப்பற்றி அலட்சியமாய் நினைக்கிறாய், ஆனால் நான் உன் வருகைக்கு ஆயத்தமாய் எல்லா ஏற்பாடுகளும் செய்து வைத்திருக்கிறேன்.

மா-அ:—அப்படி யில்லாவிட்டால் அது உன் சுபாவ நடக்கைக்குவிரோதமாயல்லவோ இருக்கும்.

லாயர்:—நீ யிப்படி யென்னை மிரட்டிப் பணம் பிடுங்குவதற்கு இதுவரையில் பேசியதற்கெல்லாம் தக்க சாட்சிகள் வைத்துக்கொண்டு தான் இருக்கிறேன்.

மா-அ:—சரி சரி. நீ மிக்கமுன் யோசனையோடு நடக்கிறாய், இப்போது உன் ஏற்பாடென்ன ?

லாயர்:—என் ஏற்பாடாவது நீ பொய்வேடந்தரித்து என்னிடம் பொருள் பறிக்கவந்த மோசக்கார கள்ளன் என்று என்னிடம் ஒப்புக்கொண்டு அவ்வாறே எழுதிக்கொடுக்க வேண்டும்.

மா-அ:—நான் அப்படி எழுதிக்கொடுக்க மறுத்து விட்டாலோ?

லாயர்:—நீயப்படி மறுத்துக்கூறிய பத்து நிமிடங்களுக்குள் உன்னைச் சிறைச்சாலைக் கனுப்பிவிடுவேன்.

மா-அ:—நீ யப்படியே செய்ய சர்வாயத்தமா யிருக்கிறாயோ?

லாயர்:—நான் இப்போது உன்னைச் சும்மா பயமுறுத்துவதாய் நினைக்காதே. நான் கூறுகிறபடி விவகாரம் நடைபெறும்.

மா-அ:—நானும் அவ்வாறே நடக்கிறேன்.

லாயர்:—அப்படியானால் என் நிபந்தனைப்படி நடக்க மறுக்கிறாயோ?

மா-அ:—"நான் கூறிய நிபந்தனைப்படி நீ நடக்கவேண்டும் என்றே நான் கூறுகிறேன்" என்று உறுதியாய்க் கூறினான்.

லாயர் இவன் வார்த்தைகளைச் சற்றும் சட்டை செய்யாதவன்போல், பூரணஜெயம் தன்கையி லிருப்பவன் எப்படி சந்தோஷத்தோடும் நம்பகத்தோடும் பேசுவானோ அவ்வாறே புன்னகையோடு,

"சரி, அப்படியானால் இந்த விஷயம் எப்படி முடிகிறதென்று இரண்டொரு நிமிடங்களில் உனக்குத் தெரிவித்து விடுகிறேன்" என்று கூறிக்கொண்டே மேஜைமே லிருக்கும் மணியை யடித்தான்.

உடனே அறையின் கதவுதிறக்கப் பட்டதும் மூன்றுபேர் நல்ல முரட்டு ஆசாமிகள் அறைக்குள் வந்தார்கள். இலாயர் மிக்க பெருமையோடும் அகங்காரத்தோடும் சந்தோஷத்தோடும் மாய அச்சுதனை நோக்கி, "இதோ இவர்கள் போலீஸ் உத்தியோகஸ்தர்கள். நான் உன்வருகைக்காக ஆயத்தமா யிருக்கிறேன் என்று கூறவில்லையா" என்றான்.

மாய அச்சுதனான நமது ஆனந்தலிங் சற்றேனும் கலவரமாவது பீதியாவது இல்லாமல் "இவர்கள் இங்கேன் வந்தார்கள்?" என்றான்.

லாயர்:—"என் வாக்கிலிருந்து கட்டளை பிறந்ததே உன்னைச் சிறைப்படுத்த வந்திருக்கிறார்கள். உத்தியோகஸ்தர்களே உங்கள் கடமையைச் செய்யுங்கள்" என்றான்.

உடனே அவர்களில் ஒருவன் எழுந்து ஆனந்தலிங்மேல் பாய்ந்தான். ஆனந்தலிங்சட்டென்று தன் இருகரங்களாலும் அவன் மணிக்கட்டுகளைப் பிடித்துக் கொண்டான். அம்மனிதன் உடனே பதைபதைத்துத் துடித்துப் பிராணாவஸ்தை யடைந்தான். ஆனந்தலிங் சட்டென்று அவனை விட்டுவிட்டான். அம்மனிதன் எள்ளளவு சக்தியுமின்றிக் கீழேபோடப்பட்ட ஒரு மூட்டைபோல் அப்படியே சுருண்டு தரையில் பொத்தென்று விழுந்து விட்டான்.

இதைக்கண்ட லாயரும் மற்ற இரண்டுபேரும் பிரமித்து மரம்போல நின்று விட்டார்கள். விழுந்த மனிதன் சற்றுநேரத்திற்குள் எழுந்து நின்று "அய்யோ தெய்வமே" என்று கூவினான்.

லாயர் மற்ற இருவரையும் நோக்கி "பாய்ந்து அவனைப்பிடியுங்கள்!" என்றான். முதல் பிடிக்கப்போய்க் கீழேவிழுந்து எழுந்து நின்றவன்,

"ஐயோ அவன்மேல் கைவைக்காதீர்கள்" என்றான்.

லாயர் கோபத்தோடு:—"இதென்ன?" என்றான்.

அம்மனிதன்:—"எங்களிடம் இவனைப் பிடிக்க வாரன்டில்லை, நீ யிவனைக் கைதுசெய்து எங்களிடம் பிடித்துக் கொடுத்தால் பிறகு நாங்கள் சிறைச்சாலைக்குக் கொண்டு போகிறோம்" என்றான். (தொடரும்.)

ஆரணி குப்புசாமி முதலியார்.

ஜருக்கிதேசத்துப் பெண்களிற் சிலர் "பாத்சால்" என்று சொல்லப்படும் கரப்பான் பூச்சிகளையும், தென் அமெரிக்கா, மேற்கு ஆப்பிரிக்கா முதலான இடங்களிலுள்ளவர்கள் வண்டுகளையும், பர்மாதேசத்திலுள்ளவர்கள், பல்லிகளையும், டெமீறறு (Demerara in the West Indies) என்னும் தீவுகளிலுள்ளவர்கள் தேவாங்குகளையும் மிக சாதாரணமாக அருந்துகிறார்கள்.

புராதன இரகசிய வெளிப்பாடு.

கும்பகோணத்தின் பக்கத்திலுள்ள தாராசுரம் ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தென்மேற்கில் முக்கால் மைல்தூரத்தில் அரிச்சந்திர புரமென்னும் ஒரு கிராமமிருக்கின்றது. இவ்வூரில் மேடான ஓரிடத்தில் கிணறொன்று சமீபகாலத்தில் வெட்டப்பட்டதாம். அதனை வெட்டும்போது பதினைந்தடிக்குக் கீழே பூமிக்குள் ஒரு படிக்கட்டு தோன்றியதாம். அதற்குக்கீழ்ப் பதினைந்து படிகள் காணப் பட்டனவாம். படிக்கட்டின் இருபக்கங்களிலும், குளத்துறைப் படிக்கட்டுகளில் அமைக்கப்பட்டவைபோல் யானைத் துதிக்கைபோன்ற உருவங்கள் கல்லால் அமைக்கப்பட் டிருக்கின்றனவாம். சுற்றுச் சுவர்களும் அமைக்கப்பட் டுள்ளனவாம். படிகளுக் கடியில் குளத்தின்பாகம் வெளிப்பட்டதாம். அவ்வாறு வெளியான பாகமாத்திரம் முப்பதடிச் சதுரமிருக்கின்றதாம். அதிலுள்ளஜலத்தை யிறைத்துப் பார்த்ததில் அடியில் சூரியவிக்கிரகமொன்று காணப்பட்டதாம். இக்குளம் வெளிப்பட்டதால் இதன் பக்கத்தில் சிவாலயமொன்றிருக்கக் கூடுமென்று யூகிக்கப்படுகின்றது. அரிச்சந்திரன், தானடைந்த சண்டாளத்துவம் நீங்கும்பொருட்டு அவ்விடத்தில் சிவாலயமொன்றை ஸ்தாபித்தா னென்றும், அதனால் அவ்விடம் அரிச்சந்திர புரமெனப் பெயர்பெற்றதென்றும், அங்குள்ள சுவாமியின்பெயர் உருத்திரபுரீசுவரர் என்றும் அவ்வூர் ஸ்தலபுராணங் கூறுவதாகவும், அஃது இதற்கு ஆதாரமாவதாகவும் அக்கிராமவாசிகள் கூறுகின்றனராம்.

* * * * *

கிறிச்சி நகரிலே வசிக்கும் பேர்பெற்ற ரசாயன சாஸ்திரியாகியமெஸ் ஒட்டோ ஓவர்பெக் என்பவர் மனிதருடைய சரீரமானது சாதாரணமான ஓர் மின்சாரயந்திரமென்றும், மின்சார ஓட்டம் சரியாய் நின்று தொழில் நடத்துகிறவரையிலே அச்சரீரம் சுகக்ஷேமத்துடன் இருந்துவருமென்றும் பற்பல விதமான நோய்களாலே வருந்துகிற பேர்களின் சரீரத்திலே தாம் கண்டுபிடித்திருக்கும் புதுமாதிரியான மின்சார யந்திரத்தாலே மின்சார ஓட்டத்தை மீண்டும் மிதப்படுத்தி அவர்கள் சீவிய ஓட்டத்தை மறுபடி நிலைநாட்டலாமெனச் சொல்லுகின்றார். அவர் தாம் கண்டுபிடித்துள்ள அப்புதிய யந்திரத்தை ஹார்லி வீதி நிபுணர்களுக்குக் காட்டியபோது அவர்கள் பெரிதும் பிரமித்தார்க ளென்றும் அவ்வியந்திரத்தைப் பிரயோகித்து மனிதரின் சீவிய காலத்தை நீடிக்கச செய்யலா மெனறும் அவர் சொல்லுகிறார். * * * * *

சோப் அரசர் என்று சொல்லப்படும் லெவர்ஹ்யூம் பிரபு சென்ற வாரம் இங்கிலாந்தில் காலஞ்சென்றார். பேர்போன சன்லைட் சோப் செய்யும் பெரிய கம்பெனியின் முதலாளி இவரே.

* * * * *

கம்பியில்லாத் தந்தியைக் கண்டுபிடித்த மார்க்கோனி என்ற பேர்பெற்ற பண்டிதர் ஸ்ரீமதி பெயிண்டர் என்ற பெண்ணை கலியாணஞ் செய்துகொள்ளப்போகிறார். பிள்ளைக்கு வயது 51. பெண்ணுக்கு வயது 18.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

**ருரோதன௵ ஆடி மீ—கலியுகாதி 5027, சாலிவாகனம் 1848.**
**பசலி 1335—கொல்லமாண்டு 1100-1101—ஹிஜரி 1343-1344,**
**இங்கிலீஷ் 1925௵ ஜுலை மீ —ஆகஸ்டு மீ**

| ஆடி | ஜுலை | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | வியா | ஏ29-50 | கிரு16-13 | மர60 | மத்வ, சர்வ ஏகாதசி |
| 2 | 17 | வெ | துவா35-0 | ரோ22-28 | ம22-28சி | கரிநாள் |
| 3 | 18 | சனி | திர40-30 | மிரு29-30 | சித்60 | சனிப்பிரதோஷம் |
| 4 | 19 | ஞா | சது46-40 | திரு37-5 | சித்60 | மாசசிவராத்திரி |
| 5 | 20 | திங் | அ●53-8 | புன45-0 | அ45-0சித் | சர்வத்திர அமாவாசை |
| 6 | 21 | செவ் | பிர59-25 | பூசம்52-53 | சித்60 | சிராவணசுத்தம் |
| 7 | 22 | புத | துதி60 | ஆயி60 | சித்60 | சந்திரதெரிசனம் |
| 8 | 23 | வியா | துதி5-30 | ஆயி0-15 | சித்0-15அ | சிம்மாயனம் நா-23-18 |
| 9 | 24 | வெ | திரி10-55 | மகம்7-13 | மர7-13சி | நாகசதுர்த்தி, ஆடிப்பூரம் |
| 10 | 25 | சனி | சது15-10 | பூரம்13-15 | சி13-15ம | கரிநாள், நாகபஞ்சமி |
| 11 | 26 | ஞா | பஞ்18-30 | உத்18-3 | அமி60 | பிரதம ருக் உபாகர்மம் |
| 12 | 27 | திங் | சஷ்20-15 | அஸ்21-25 | சி21-25பி | |
| 13 | 28 | செவ் | சப்20-18 | சித்23-13 | சித்60 | |
| 14 | 29 | புத | அ18-38 | சுவா23-15 | சித்60 | |
| 15 | 30 | வியா | நவ15-13 | விசா21-30 | சித்60 | |
| 16 | 31 | வெ | தச10 | அனு18-10 | சி18-10ம | |
| 17 | 1 | சனி | ஏ3-28<br>து55-48 | கேட்13-23 | சித்60 | |
| 18 | 2 | ஞா | திர47-10 | மூல7-28 | அ7-28சித் | |
| 19 | 3 | திங் | சது38-3 | பூரா0-45<br>உத்53-40 | ம53-40அ | |
| 20 | 4 | செவ் | ○28-48 | திரு46-25 | சித்60 | பௌர்ணமி, ருக் யஜுர் உபாகர்மம், (பிரதமம் நீங்கலாக, ஆவணி அவிட்டம் |
| 21 | ஆகஸ்டு 5 | புத | பிர19-45 | அவி39-43 | பி39-43சி | சிராவணபகுளம் |
| 22 | 6 | வியா | துதி11-25 | சதை33-38 | ம33 38சி | கஜ்ஜாலிதிரிதிகை |
| 23 | 7 | வெ | திரி4-10<br>சது58-18 | பூரட்28-58 | சித60 | சங்கட சதுர்த்தி, அவமாகம், ஏற்றம் ஸ்தாபிக்க |
| 24 | 8 | சனி | பஞ்54-3 | உத்25 43 | சி25-43ம | அவமாகம் |
| 25 | 9 | ஞா | சஷ்51 43 | ரேவ24-20 | அ24-20சி | காதுகுத்த, உபநயனம் |
| 26 | 10 | திங் | சப்51-23 | அஸ்24-53 | சித60 | பும்சவனம், உபநயனம் |
| 27 | 11 | செவ் | அ53-0 | பரணி27-25 | சித60 | கோகுலாஷ்டமி |
| 28 | 12 | புத | நவ56-20 | கிரு✕31-43 | அ31-43சி | கிருத்திகை, கடன் நீக்க |
| 29 | 13 | வியா | தச60 | ரோ37-35 | மர60 | ஸ்ரீ கிருஷ்ணஜயந்தி |
| 30 | 14 | வெ | தச1-10 | மிரு44-35 | சித்60 | வாகனமேற |
| 31 | 15 | சனி | ஏகா6-58 | திரு52-15 | சித்60 | மத்வ சர்வ ஏகாதசி |

| | | | |
|---|---|---|---|
| | | | |
| கே | 5உ சிம்-புத<br>7உ சிம்-சுக்<br>17உ சிம்-செ<br>31உ கன்-சுக் | | ரா-சூ<br>செ<br>பு-சு |
| குரு | | சனி | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE
"ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST, MADRAS,